**[1]**

தமிழ்ச் சமூக வரலாற்றாய்வில் வேளாளர் என்று பொதுவாக அடையாளப்படுத்தப்படும் சாதிக் குழுக்கள் பற்றிய ஆய்வு மிகவும் சிக்கல் வாய்ந்ததாகும். இதற்கு முதன்மையான காரணம், சூத்திரர்கள் என்று வகைப்படுத்தப்பட்டாலும் சாதியமைப்பில் பிராம்மணர்களுக்கு அடுத்த படிநிலையில் வேளாளர்களே இருப்பதாகப் பொதுப் பிரக்ஞையில் பதிந்திருப்பதுதான். எனவே சமஸ்கிருதம், ஆரிய இனம், வருணாசிரமம், மனுஸ்மிருதி எனப்படுவனவற்றின் அடையாளம் பிராம்மணர்கள் என்றும், திராவிட இனம், தமிழ் போன்ற விழுமியங்களின் பிரதிநிதிகள் வேளாளர்களே (அல்லது வேளாளர்களின் தலைமையை ஏற்ற திராவிடர்களே) என்றும் ஓர் இருமை நிலைக் கோட்பாடு உருவாவது எளிதாயிற்று. இதன் விளைவாகத் தமிழின் மிகப்பழைய இலக்கண நூலான தொல்காப்பியத்தில் (பெருளதிகாரம், மரபியல், 71-85) இடம்பெறுகிற அந்தணர், அரசர், வைசிகர்[1] வேளாளர் என்ற பகுப்பு முறையையே சற்று மாற்றி அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்று வரிசைப்படுத்தி, இது பிராம்மணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனப்பட்ட வட இந்திய வர்ணாசிரம அமைப்பிலிருந்து வேறுபட்டது என்றும் சில அறிஞர்கள் கூறத்தொடங்கினர். வேளாளர் எனப்பட்டோர் அரசர்க்கு மகட்கொடைக்குரியோர் எனச் சங்க இலக்கியங்களுக்கு உரையெழுதிய பிற்கால உரையாசிரியர்கள் குறிப்பிடுவதாலும், சங்ககால அரசர்களுக்குக் கட்டுப்பட்ட அல்லது அவர்களுடன் மண உறவு கொண்டிருந்த சிற்றரச மரபினரான வேளிர்களே பிற்காலத்தில் வேளாளர்கள் எனக் குறிப்பிடப்பட்டனர் என்று சில ஆய்வாளர்கள் முடிவு செய்ததாலும் இத்தகைய அரசர் = வேளாளர் என்று சமன்படுத்தும் கருத்து வலிமை பெறலாயிற்று.

தமிழகத்தின் முதன்மையான போர்க்குடிகள் என்று கருதப்படுகிற கள்ளர், மறவர், அகம்படியர் ஆகியோர் மெள்ள மெள்ள வெள்ளாளர்களாக உயர்ந்தனர் எனப் பொருள்படும் "கள்ளன் மறவன் கனத்தோர் அகம்படியன் மெள்ள மெள்ளவே வெள்ளாளன் ஆனான்" என்ற பிற்காலப் பழமொழி, இத்தகைய பொருள் கோடலுக்கு மேலும் வலிமை சேர்த்தது. இவை மட்டுமின்றி, ஐரோப்பியக் காலனியாதிக்கத்துக்கு முன்னரே, கி.பி. 14-15ஆம்

நூற்றாண்டுகளிலேயே வேளாளர் சாதிக் குழுக்கள் தமிழகத்தில் பிராம்மணர்களையடுத்த சமூகப் பொருளாதார அந்தஸ்தினை அடைந்திருந்ததாலும் இக்கருத்து மிக இயல்பாகப் பொதுப் பிரக்ஞையில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

வரலாற்றில் வைதிகப் பிராம்மணர்களின் பங்களிப்பு குறித்து உடன்பாட்டு நிலையிலும் சரி, எதிர் மறைநிலையிலும் சரி - அளவுக்கதிகமாக முதன்மை அளித்தன்மூலம் தொடக்க நிலையிலிருந்தே வைதிக பிராம்மண சாதியினர் மட்டும்தான் அந்தண வர்ணத்தவராகத் தம்மை வகைப்படுத்திக் கொண்டனர் என்றும், பிற வர்ணப் பகுப்புகள் எல்லாம் அவ்வக்காலங்களில் வைதிக பிராம்மணர்களால் செயற்கையாகவும், தம் வசதிக்கேற்பவும் சமயோசிதமாகவும் வகைப்படுத்தப்பட்டவைதாம் என்றும் ஒரு விளக்கவுரையும் வேறுசில அறிஞர்களால் வழங்கப்பட்டது. இந்த விளக்கவுரையின் அடிப்படையில், குறுநிலத் தலைவர்களாக இருந்த நிலக்கிழார்கள் வேளாளச் சாதியினராக நீடித்தனர் என்றும், நாட்டின் தலைவனான அரசன் வேளாளச் சாதியினனாக இருந்தாலும் அரச வர்ணத்தவனாக வகைப்படுத்தப்பட்டான் என்றும் தர்க்கத்துக்குப் பொருந்தாத விரிவுரைகள் கூறப்பட்டன. ஆனால், சமூக வரலாற்றாய்வில் வேளாளர் குறித்த இக்கருத்தோட்டம் கேள்விக்கு உட்படுத்தப்படும்போது விடை காண இயலாத சிக்கல்கள் எழுந்தன. எடுத்துக்காட்டாக, அரசர்களின் குலம் என்பது தனிச் சாதியாக இல்லாதிருந்தால், கி.பி. 12ஆம் நூற்றாண்டில் பெரியபுராணம் இயற்றிய சேக்கிழார் அரச குல நாயன்மார்களை அரச குலத்தவர்கள் என்றும், வேளாளர் குல அடியார்களின் சாதி அடையாளத்தைத் தனியாகவும் குறிப்பிட வேண்டிய நிர்ப்பந்தம் என்ன என்ற கேள்வி எழுந்தது. கி.பி. 14ஆம் நூற்றாண்டில் சந்தான குரவருள் கடைசிக் குரவர் உமாபதி சிவாச்சாரியாரால் எழுதப்பட்டதாகக் கருதப்படும் சேக்கிழார் புராணத்திலும் அரசகுல நாயன்மார்களும் வேளாளர் சாதி நாயன்மார்களும் தனித்தனிச் சாதியினராகவே பட்டியலிடப்பட்டுள்ளனர்.

இப்போது மீண்டும் தொல்காப்பியம் குறிப்பிடும் வருணப் பகுப்புக்கே திரும்புவோம். அந்தணர் = பிராம்மணர்; சத்திரியர் அல்லது ராஜன்யர் = அரசர்; வைசிகர் = வைசியர்; வேளாளர் = சூத்திரர் என்ற சமன்பாடு குறித்து ஆராய்வோம். வருணாசிரம அமைப்பின் ஆரம்ப கட்டங்களில் - கிறிஸ்து

சகாப்தத் தொடக்க நூற்றாண்டுகள்வரை வணிகர் என்ற தனியான வர்ணப் பிரிவு உருவாகவில்லை. வைசியர் என்ற சொல் 'விஸ்' (பொது) என்ற சொல்லிருந்து தோன்றியதாகும். அதாவது வைஸ்யர் என்றால் அடிமைகளல்லாத பொதுமக்கள்; விஸ்வக் (உலக) குடிகள் என்றே பொருள்படும். அரசுக்கு இறை (வாரம்) செலுத்துகின்ற உழவர், கைவினைஞர், வணிகர், குடிபடைகளாகச் செயல்படுகிற வீரர்கள் - ஆகியோர் வைஸ்யரே. சூத்திரர் (வேத மொழியில் தஸ்யூ) எனப்பட்டோர் அடிமைகள் ஆவர். இவர்கள் பெரும்பாலும் போர்களின்போது சிறைப்பிடிக்கப்பட்டவர்களும், சிறைப்பிடிக்கப்பட்ட பெண்டிரின் வம்சத்தவரும் ஆவர். இவர்கள் முறையான மண உறவுக்குரியோர் அல்லர். குடும்பம், அதன் தகுதிப்பாட்டு அடையாளமான சொத்துரிமை ஆகியன இவர்களுக்கு இல்லை. இதுவே வர்ணாசிரம அமைப்பின் பரிணாம வளர்ச்சியில் மிகவும் முற்பட்ட நிலையாகும். சூத்திரர் என்ற கருத்தோட்டத்தைத் தமிழில் சொல்வதற்குத் தொல்காப்பியம் ஏன் 'வேளாளர்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறது என்ற கேள்விக்கான விடையில்தான் இந்த அடிப்படைச் சிக்கலுக்கான விடையும் உள்ளது.

**வேளமும் வேளாண்மையும்**

வேளாண்மை என்ற சொல் கலித்தொகையில் (பா. 101:45) பயன்படுத்தப்படுகிறது. பிரிந்து சென்ற காதலன் வரப்போவதை உணர்த்தும் வகையில் காதலியின் இடக்கண் துடிக்கிறது. (பெண்களுக்கு இடக்கண்ணும் இடத்தோளும் துடித்தல் நற்சகுனம்.) இது தனிமையில் புலம்பிக்கொண்டிருக்கிற காதலிக்குக் காதலன் வரவை முன்னறிவித்து உபகாரம் செய்கிற வகையில் அமைந்திருப்பதாகக் காதலி குறிப்பிடுகிறாள். இதனை "வேளாண்மை செய்தன கண்" எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது. இடக்கண்ணை மட்டும் துடிக்கவிட்டு, வலக்கண் துடிக்காமல் இருந்து ஒத்துழைப்பதால் ''செய்தன கண்'' எனப் புலவர் பன்மையில் குறிப்பிடுவதாக உரையாசிரியர்கள் அழகாக விளக்கமும் அளிக்கின்றனர். இங்கு வேளாண்மை என்பது உதவுதல் (உபசரித்தல், உபகாரம் செய்தல்) என்ற பொருளிலோ, தலைவர்கள் வருகையை வாயிலோர் முன்னறிவிப்பதுபோல் முன்னறிவித்தல் என்ற பொருளிலோ பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு தலைமக்களுக்கு வாயிலோராகப்

பணிபுரிவோர் "வேளாண் வாயில்" என்றே பொருநராற்றுப் படையில் சுட்டப்படுகின்றனர்.[2]

பரிபாடலில் மட்டும்தான் (20:62,63) வேளாளர் என்ற சொல் மாடுகளை உழவுக்குப் பயன்படுத்தும் உழவர் என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது. வேளாளர்கள் எருதுகளை ஏர்க்கலப்பை நுகத்தடியில் பூட்டி உழும் கடமை உடையவர்கள் என்ற கருத்தை இப்பரிபாடல் வரிகள் புலப்படுத்துகின்றன: ''எருது தொழில் செய்யாது ஓடவிடுகடன் வேளார்க்கு இன்று.'' அதாவது, உழவு மாடுகளைத் தொழிலுக்குப் பயன்படுத்தும் கட்டாயக் கடமை அவர்களுக்கு இருந்தது. அவ்வாறு ஏருழவு, விளைபொருள்களை வண்டியில் ஏற்றிக்கொணர்ந்து நிலக்கிழார்களிடம் ஒப்படைத்தல் போன்ற பணிகளுக்கென மட்டுமே மாடுகளைப் பயன்படுத்த வேண்டுமென்று வேளாளர்களுக்கு நிபந்தனை விதிக்கப்பட்டிருந்தது போலும்.

வேளாண்மை என்பது உபசரித்தல், வரவேற்பு போன்ற பொருள்களிலிருந்து விலகி விவசாயம் (பயிர் வெள்ளாமை) என்ற பொருளைப் பெற்றுவிட்டதற்கான முதல் அடையாளம் இதுவே. பரிபாடலின் காலம் கி.பி. 4-5ஆம் நூற்றாண்டு எனக் கொண்டால், ''வேளாண் மாந்தர்க்கு உழுதூணல்லது இல்லென மொழிய பிறவகை நிகழ்ச்சி'' எனக் குறிப்பிடும் தொல்காப்பிய நூற்பாவும் (மரபியல் 81) இதே கால கட்டத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என முடிவு செய்வதே உசிதமாகும். அதே வேளையில் வேளாண்மை என்பதற்கு உபசரித்தல், வரவேற்பு என்பவே பூர்விகப் பொருள்கள் என நாம் ஏற்பதிலும் ஒரு சிக்கல் உள்ளது. வேளாண்மை என்பது வேளிர் அல்லது வேள்களின் ஆளுமைப் பண்பு; அதுவே உபகாரம் - அதற்குச் சான்று "முல்லைக்குத் தேரீந்த பாரி" என்ற எளிய சமன்பாடு இருக்கும்போது அதை ஏன் மறுக்க வேண்டும்? ஆனால், இந்தச் சிக்கலுக்கும் விடை உள்ளது.

சங்ககால வேளிர்கள் அரச குலத்தவரேயன்றி வேளாண் வருணத்தவரல்லர். அதனால்தான் போலும் மூவேந்தர்களைக் குறிப்பிடும் தொல்காப்பியம் வேளிர் பற்றி ஓரிடத்தில்கூடக் குறிப்பிடவில்லை. வேளாளர்களின் பிற்காலத்து மெய்க்கீர்த்திகளில் அரவின் புற்றில் கையிட்டோர், சூலி முதுகில் சோறிட்டோர், நீலி பழி கழுவினோர், ஆடைகீறிச் சிலந்தி

காட்டினோர் என்பன போன்ற வேளாள மூதாதையர் செயல்கள் குறிப்பிடப்படுகின்றனவே தவிர, ஓரிடத்தில்கூட "முல்லைக்குத் தேர் ஈந்தமை" போன்ற வேளிர்குல அருஞ்செயல் குறிப்பிடப்படவில்லை. எனவே, வேளாண்மை என்பது வேள்களின் ஆளுமை எனப் பொருள் கொள்வதைவிட உபசரிப்பு, வரவேற்பு போன்ற பணிகளுடன் தொடர்புடைய வாயிலோர் தன்மை என்று பொருள்கொள்வதே பொருத்தமாகும்.

இருக்குவேளிர் குலத்தைச் சேர்ந்த இடங்கழி நாயனாரை, ஆதித்தன் குல முதலோர் (அதாவது சூரிய குலத்தவன் - சோழ குலத்தின் மூதாதை) எனச் சேக்கிழார் குறிப்பிடுகிறார்.[3] உமாபதி சிவாச்சாரியாரும் இவரை அரச குலத்தவராகக் குறிப்பிடுகிறாரே தவிர வேளாளர் குலத்தவராகக் குறிப்பிடவில்லை.

கி.பி. 9ஆம் நூற்றாண்டைய ஆய் மன்னனின் பார்த்திவசேகரபுரம் செப்பேட்டில் (வரி. 60-61) "வெள்ளாட்டி" என்ற சொல் இடம்பெற்றுள்ளது.[4] வேலைக்காரி என்பது இதன் பொருள். இச்சொல் வேளாட்டி என்பதன் திரிபாகும். வேளம் என்ற சொல், சிறைச்சாலை, சிறைப்பிடிக்கப்பட்ட உயர்குடிப் பெண்டிர் வாழ்விடம் என்ற பொருள்களில் கி.பி. 12ஆம் நூற்றாண்டுச் சோழர் சாசனங்களிலும், இலக்கியங்களிலும் பயன்படுத்தப்படுகிறது.[5] இவ்வாறு அரச குடியினர் வேளத்தில் ஏற்றப்படும் வழக்கம் பிற்காலச் சோழர் ஆட்சியில் புதிதாகப் புகுந்திருக்க வாய்ப்பில்லை. சங்க காலத்திலேயே இருந்திருக்க வேண்டும் என்பதற்கு ஒரு மறைமுகச் சான்று உள்ளது. சேர மன்னன் கணைக்கால் இரும்பொறை, சோழன் கோச்செங்கணானுடன் போரிட்டுத் தோற்றுக் குடவாயிற் கோட்டத்தில் சிறை வைக்கப்பட்டான். அப்போது அவன் ஒரு பாடல் இயற்றிவிட்டு உயிர்துறந்தான். அப்பாடலில், சிறையில் அவனுக்கு வழங்கப்பட்ட உணவு "வேளாண் சிறுபதம்" என குறிப்பிடப்படுகிறது.[6] வேளத்தில் வழங்கப்படுகிற அல்லது வேளாண் பெண்டிரால் சமைக்கப்படுகிற சிறுமைப்பட்ட உணவு என்பது இதன் பொருள் எனத் தோன்றுகிறது. இத்தகைய வேளத்துப் பணிப் பெண்டிரான வேளாட்டியர்க்கு - வேலைக்காரிகளுக்குப் பிறந்தோர் 'வேள ஆளர்' எனக் குறிப்பிடப்பட்டனர் எனப் பொருள்கொள்வது பொருத்தமாக உள்ளது. தாசி (வேலைக்காரி, அடிமைப்பெண்) மகன் என்று பொருள்படும் தஸ்யூ என்ற சொல்லின் நேர்ப் பொருளில் வேள ஆளர் என்பது

அமைந்துள்ளது என்பதால்தான் வேளாண் மாந்தர் என்ற சொல் சூத்திரர் என்ற கருத்தோட்டத்தைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லாகத் தொல்காப்பியத்தால் பயன்படுத்தப்பட்டுள்ளதென நாம் முடிவு செய்யலாம். கி.பி. 12ஆம் நூற்றாண்டில் பெரியபுராணம் எழுதிய சேக்கிழார் (இவரே தொண்டை மண்டல வேளாளர் சமூகத்தவர் ஆவார்) சூத்திரத்தொல்குலம், நாலாங்குலம், வேளாண்குடி ஆகியவற்றை ஒரே பொருளில் பயன்படுத்துவது இது தொடர்பாக அறியத்தக்கது. ஆனால் ஒரு முதன்மையான பிரச்சினை என்னவென்றால், சூத்திரர் என்பது வருணப் பிரிவினை. அப்படியானால் வேளாளர் என்பதும் வருணப் பிரிவினையாகத்தானே இருக்க முடியும்? வேளாளர் என்பது சாதிப் பெயராகத்தானே இருந்து வருகிறது? தமிழக வரலாற்றில், வேளாளர் சாதிக் குழுக்கள் மட்டுமின்றிப் பல்வேறு கைவினைஞர் சாதிக் குழுக்களும் குடி படைகளான போர்க்குடிகளும் சூத்திரர்களாகத்தானே வகைப்படுத்தப்பட்டுள்ளன? இத்தகைய ஒழுங்கற்ற ஒரு வருணப் பகுப்பு முறை தமிழகத்தில் நடைமுறையில் இருந்திருக்க வாய்ப்பு உண்டா என்ற கேள்விகள் எழுகின்றன.

இந்தியாவில் நிலப்பிரபுத்துவ முறையின் பரிணாம வளர்ச்சியை ஆராய்ந்த அறிஞர்கள் சிலர் நம் கேள்விகளுக்கு விடையளிக்கும் வகையில் ஒரு கருத்தைக் குறிப்பிட்டுள்ளனர். "இந்திய நிலமானிய முறை" (Indian Feudalism) என்ற நூலை எழுதிய ராம்சரண் சர்மா[7] பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"(நிலமானிய முறை வரலாற்றில்) சூத்திரர்கள் விவசாயிகளாக மாறியது ஒரு முக்கியமான வளர்ச்சியாகும். சமுதாயத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் ஏற்பட்ட இந்த மாறுதல் குப்தர் காலத்தில் தொடங்கியது. கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பாதி முடிவதற்குள் சூத்திரர் அனைவருமே விவசாயிகள் என்ற நிலை ஏற்பட்டு விட்டது. விவசாயிகளுள் பெரும்பாலோர் சூத்திரர்கள் என்ற கூற்று குப்தர்களுக்கு முற்பட்ட காலத்தில் உண்மையாய் இருந்திருக்காது. ஆனால் குப்தர் காலத்திற்கும் அதற்குப் பிற்பட்ட காலத்திற்கும் அந்தக் கூற்று மிகவும் பொருத்தமானது. அடிமைகளாகவும் கூலிக்குப் பயிரிட்ட உழவர்களாகவும் இருந்த சூத்திரர்கள் விவசாயிகளாக மாறியது நிலமானிய முறையின் தோற்றம் என்ற கோணத்திலிருந்து நோக்கும்போது ஒரு முக்கியமான நிகழ்ச்சியாய் இருக்கிறது."

குப்தர் காலம் என இம்மேற்கோளில் குறிப்பிடப்படுவது கி.பி. 4-5ஆம் நூற்றாண்டுகளாகும். இதற்குச் சமகாலத்தில் தமிழகத்தில் மூவேந்தர் ஆட்சி மறைந்து களப்பிரர் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. களப்பிரர் ஆட்சிக் காலம் என்பது இருண்ட காலம் என்ற கருத்தினைத் தற்போது தமிழறிஞர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. ஆயினும் களப்பிரர் யார், அவர்கள் எத்தகைய சமூக இயக்கப்போக்கின் பிரதிநிதிகள் என்பன போன்ற கேள்விகளுக்கு விடைகாணும் முயற்சிகள் சரியான கோணத்தில் மேற்கொள்ளப்படவில்லை.

**களப்பிரர் ஆட்சி = வைசியர், வேளாளர் கூட்டணி ஆட்சி**

வட இந்தியாவில் குப்தர்கள் ஆட்சி நடந்துகொண்டிருக்கும்போது தென் இந்தியாவில், குறிப்பாகத் தமிழகத்தில் அதன் தாக்கம் ஏதும் இருந்ததா என்றே இதுவரை ஆராயப்படவில்லை. சற்றொப்ப இக்காலகட்டத்தில் தோன்றிய சிலப்பதிகாரமும் மணிமேகலையும், பொருள் பரிவர்த்தனையையே வாழ்வாதாரமாகக் கொண்ட வணிக வர்க்கம் ஒன்று உருவாகிச் செல்வாக்குடன் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிவிட்டத்தை உணர்த்துகின்றன. குப்தர்கள் வைசிய வருணத்தவர் என்பது நாம் கவனத்தில் கொள்ளத்தக்கது. குப்தர் காலத்தில் ஏற்பட்ட வணிகப் பெருக்கத்தாலும் பணப் புழக்கத்தாலும், நகர மயமாதலின் முதன்மையான ஓர் அம்சமான 'நாகரிகம்' என்பதும் வளர்ந்து வந்தது என்பதை குப்தர் காலக் கலை இலக்கிய வெளிப்பாடுகள் உணர்த்துகின்றன. தொழில் வளர்ச்சியில் உன்னத நிலை எட்டப்பட்டிருந்தது என்பதைத் துருப்பிடிக்காத இரும்புத்தூண் போன்ற அற்புதப் படைப்புகள் நிறுவுகின்றன. சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படுகின்ற பரபரப்பான சமூக நடைமுறைகள் போன்றவை கைவினைஞர் சமூகத்தின் நாடுதழுவிய ஊடாட்டத்தால் தொழில் வளர்ச்சி ஏற்பட்டுவிட்டதன் அடையாளங்களாகும். மணிமேகலையில் (19:107-125), “மகத வினைஞரும் மராட்டக் கம்மரும் அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும் தண்டமிழ் விளைஞர் தம்மொடு கட்டிக் கொண்டினி தியற்றிய மண்டபம்” குறிப்பிடப்படுகிறது. இத்தகை சாதனைகளுக்கு வணிக வர்க்கத்தின் எழுச்சியே பின்னணியாகவும், உந்து சக்தியாகவும் இருந்ததென்பதை நாம் உணர்கிற அதே வேளையில், வேறு இருவித இயக்கப் போக்குகளையும் உய்த்துணரலாம்.

1) வைசியர் என்ற வர்ணப் பெயர், சுதந்திரமான உழுகுடிகளையே முதன்மையாகக் குறித்த நிலை மாறி, சமூகத் தலைமையை எய்திவிட்ட வணிக வர்க்கத்தவரைக் குறிக்கத் தொடங்கிவிட்டது. தொல்காப்பியம் (மரபியல் 78), "வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை" எனக் குறிப்பிடுவதன் பின்னணி இதுவே. அடிமை நிலையிலிருந்த உழுகுடிகள், இப்போது அடிமைத் தளையிலிருந்து விடுபட்டுவிட்டனர். அரசு என்பது மூவேந்தர், வேளிர் போன்ற (சந்திர குல, சூரிய குல, யது குலச்) சத்திரியர்களால் இயக்கப்படுவது என்ற நிலை மாறிவிட்டது. தாய்வழிச் சமூகக் கூறுகளை மிகுதியாகக் கொண்ட அசுர குலச் சத்திரியன் மகாபலியின் வம்சத்தைச் சேர்ந்த பெண்மணி, சோழ நாட்டு இராசமாதேவியாக இருந்த நிலை மணிமேகலையால் (19:54-55) தெரியவருகிறது. சோழ அரசனுக்கு நாக நாட்டு இளவரசி பீலிவளையிடம் களவு மணத்தில் பிறந்த குழந்தை சோழ குலத்தவனாக அங்கீகரிக்கப்படாமல் 'தொண்டைமான்' என்ற பட்டத்துடனும், வேளாளர் என்ற வர்ண அந்தஸ்துடனும் அரசமைத்தமை, மணிமேகலை (24:57-59) வரிகளுடன் பெரும்பாணாற்றுப்படை (30-31) வரிகளுக்கு உரையாசிரியர்கள் அளிக்கும் விளக்கத்தையும் சேர்த்துப் படித்தால் தெரியவருகிறது. இதேபோன்று, சோழ அரசனுக்கு வேளாட்டியர் வம்சத்துப் பெண்மணி வசம் பிறந்தமையால் சோழ அரச குல அந்தஸ்து கிட்டாத களந்தையர் கோன் கூற்றுவ நாயனார் வரலாறும் இக்கால கட்டச் சமூக இயக்கப் போக்குகளை உணர்த்தும். இவை பற்றிப் பின்னர் விரிவாக ஆராய்வோம்.

வணிக வர்க்கத்தவரின் ஆதரவுடன் ஆட்சியைக் கைப்பற்றிய இத்தகையோரால் இயக்கப்படுகிற அரசுக்கு வாரம் (இறை) செலுத்துகிற அளவுக்குச் சுதந்திரக் குடிகளாக வேளாளர்கள் உயர்ந்தனர். அவர்களில் பலர் முறையான திருமுண உறவு, குடும்ப வாழ்க்கை ஆகியவற்றைப் பின்பற்றும் உரிமை எய்திவிட்டனர். தொல்காப்பியம் கற்பியல் 3ஆம் நூற்பா, மேல் மூன்று வருணத்தாருக்கு மட்டுமே உரியதாயிருந்த திருமண நடைமுறை கீழ் வருணத்தாராகிய வேளாளர்க்கும் தற்காலத்தில் உரியதாகிவிட்டது என்று பொருள்படும்வண்ணம், "மேலோர் மூவர்க்கும் புணர்த்த காரணம் கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே" எனக் குறிப்பிடுவதும் இச்சமூக மாற்றத்தை உள்ளடக்கியே ஆகும்.

2) வைசியர் - சூத்திரர் கூட்டணி ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிவிட்டதன் விளைவாக வைதிக பிராம்மணர்களைவிட அதிகமாகப் பாதிக்கப்பட்டவர்கள் அரச குலத்தவரே. அதே வேளையில், முன்னர் பிராம்மண வர்ணத்தில் சேர்க்கப்பட்டிருந்த – அதாவது அதிகார அந்தஸ்து நிலையில் வைதிக பிராம்மணர்களுக்குச் சமமாக மதிக்கப்பட்ட[8] வேளாப் பார்ப்பனர் – கண்மாளர்கள் - வணிகர்களின் கட்டுப்பாட்டுக்குள் கொணரப்பட்டுக் கைவினைஞர்களாகவும், வாரக் குடிகளான உழவர்களுக்கு ஏர்க் கலப்பை, மாட்டு வண்டி போன்றன செய்துகொடுத்துக் கூலிபெறும் தசசு, கொல்லுத் தொழிலாளர்களாகவும் ஆயினர். தங்களுக்குக் கட்டுப்பட்ட உள்குடிகளாகப் (உழுகுடிகளாக) பரம்பரை அடிமை வர்க்கம் ஒன்றை உருவாக்கும் முயற்சியில் புதிய வாரக் குடியினரான குடியானவர் (வேளாளர்) இறங்கினர். வள்ளுவர் (கணியர்) போன்ற அறிவர் குழுவினர் பலர் பிராம்மண வர்ணத்தில் சேர்க்கப்பட்டிருந்த சங்க கால நிலைமை மாறிப் பறையர் சமூகத்துடன் இணைக்கப்படுவதற்குரிய நியாயத்தை உருவாக்கும் இயக்கப்போக்கு உருவாகிவிட்டது. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களை 'வேளாண் வேதம்' எனக் குறிப்பிடுவதற்கான சமூக வரலாற்றுப் பின்னணி இதுவே. வேளாளர்களின் பிற்கால மெய்க்கீர்த்திகளில் "பாணன் பிணம் சுமந்தோர் பறையனோடு சோறுண்டோர்" எனக் குறிப்பிடப்படுவதும் இத்தொடர்பினை உணர்த்தும். பள்ளர், பறையர் சமூகம் கருங்கை வினைஞர்களாகவும், களமர்களாகவும் உருமாறிய பின்னணி இதுவே எனத் தோன்றுகிறது.

**அடிக்குறிப்புகள்:**

1. "வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை" என்று நூற்பாவின் (தொல். மரபியல், 78) அடிப்படையில் வைசிய வர்ணத்தவர் எனக் குறிப்பிடுவதே வணிக வர்ணத்தவர் எனக் குறிப்பிடுவதைவிடப் பொருத்தமானதாகும்.

2. "கேளிர் போலக் கேள் கொளல் வேண்டி வேளாண் வாயில் வேட்பக் கூறி" - பொருநர். 75. வேளாண்வாயில் என்பது "உபகாரம் செய்வதற்கு உரிய முகாந்தரமாக அமையும் யாசகம்" என்று உரையாசிரியர் பொருள் கூறுகின்றார். தனது அரண்மனைக்கு வந்த பொருநர்களைக் கரிகாலன்

உபசார வார்த்தைகள் கூறி வரவேற்பது இவ்வாறு குறிப்பிடப்படுகிறது. வேளாண்வாயிலோரின் பணிகளுள் வரவேற்பாளர் (receptionist) பணியும் ஒன்றெனத் தெரிகிறது.

3. "அந்நகரத்தினிலிருக்கும் வேளிர்குல அரசளித்து ----- ஆதித்தன் குல முதலோர்" - பெரியபுராணம், கடல்சூழ்ந்த சருக்கம், பா. 16.

4."சட்டர் வெள்ளாட்டிகளை மடத்தில் வைத்துக் கொள்ளப் பெறார்", பக். அ16, பாண்டியர் செப்பேடுகள் பத்து, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, 1999.

5. கலிங்கத்துப்பரணி - தாழிசை 41; "வேளத்துப் பெண்டாட்டி", "உத்தமசீலியார் வேளம்" போன்ற பல குறிப்புகள் சோழர் கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளன.

6. புறநானூறு 74:4. இப்புறப்பாடலின் அடிக்குறிப்பில் இச்செய்தி குறிப்பிடப்படுகிறது. இது பிற்காலத்தில் கற்பனையாக எழுதிச் சேர்க்கப்பட்டது என்றும், நம்பத் தகுந்ததன்று என்றும் ஒரு வாதம் சிலரால் முன்வைக்கப்படுகிறது. இப்பாடலில் போரில் வீர மரணமடையாமல் எதிரிகளால் சிறைப்பிடிக்கப்பட்டு இழிவுபடுத்தப்பட்ட தலைமகன் ஒருவனின் கழிவிரக்கம் உள்ளத்தை உருக்கும் வகையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது என்பதை யாரும் மறுக்க முடியாது. எனவே, இப்புறநானூற்று அடிக்குறிப்பு பொருத்தமானதே.

7. பக். 76-77, இந்திய நிலமானிய முறை, தமிழாக்கம்: மு.ரா. பெருமாள் முதலியார், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ். சென்னை-600098. 1989.

8. சிலப்பதிகாரம் 10:125, உரை - பக். 259, 276, சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும், உ.வே.சா. நூல் நிலையப் பதிப்பு, சென்னை-600090, 2008.

## வேளாண்மை = விருந்தோம்பல்

சூத்திர வர்ணத்தவரே தமிழில் வேளாண் மாந்தர் எனக் குறிப்பிடப்பட்டனர் என்பதை ஏற்றுக்கொள்வதில் முதன்மையான ஓர் ஆட்சேபனை எழுப்பப்பட வாய்ப்பு உள்ளது. தமிழ் வேதமாகக் கருதிப் போற்றப்படும் திருக்குறளில் வேளாண்மை என்ற சொல் மிகவும் சிறப்பான பொருளில் பயன்படுத்தப்படுகிறது. ஆள்வினையுடைமை என்ற அதிகாரத்தில் இடம்பெற்றுள்ள குறளில் "வேளாண்மை என்னும் செருக்கு" என்ற தொடர் இடம்பெற்றுள்ளது. வேளாண்மை என்பது சூத்திர வர்ணத்தவரின் தொழில் சார்ந்த தன்மை என்று பொருள்படுமெனில் திருக்குறள் அதனைப் பெருமிதமிக்க ஒரு பண்பு நலனாகக் குறிப்பிடவேண்டிய அவசியம் யாது? என்ற கேள்வி எழுகிறது. இது குறித்து விரிவாக ஆராய்வோம்.

திருக்குறள் அறத்துப்பாலில் விருந்தோம்பல், ஒப்புரவு அறிதல் என்ற இரண்டு அதிகாரங்களிலும் பொருட்பாலில் ஆள்வினையுடைமை என்ற அதிகாரத்திலும் வேளாண்மை என்ற சொல் இடம்பெற்றுள்ளது. விருந்தோம்பல் அதிகாரத்தில்,

*இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி*
*வேளாண்மை செய்தற் பொருட்டு*

- என்ற குறள் இடம்பெற்றுள்ளது. விருந்தினரின் தேவையறிந்து அவற்றை நிறைவுசெய்வதே வேளாண்மை என்ற சொல்லால் இக்குறளில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒப்புரவு அறிதல் அதிகாரத்தில்.

*தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு*
*வேளாண்மை செய்தற் பொருட்டு*

என்ற குறள் இடம்பெற்றுள்ளது. பாடுபட்டுப் பொருள் சேர்ப்பதே தகுதி உடையவர்களை உபசரித்து அவர்களின் தேவைகளை நிறைவு

செய்வதற்காகத்தான் என்பது இக்குறளின் பொருளாகும். இக்குறளிலும் வேளாண்மை என்பது உபசரித்தல், பேணுதல், தேவைகளை உரிய வகையில் நிறைவுசெய்தல் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

பொருட்பாலில் இடம்பெற்றுள்ள ஆள்வினையுடைமை அதிகாரத்தில்,

*தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே*
*வேளாண்மை என்னும் செருக்கு*

- என்ற குறளும்,

*தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை*
*வாளாண்மைப் போலக் கெடும்*

- என்ற குறளும் இடம்பெற்றுள்ளன. இக்குறள்களில் இடம்பெற்றுள்ள தாளாண்மை என்ற சொல், தகுந்த செயல்திட்டத்தின் அடிப்படையிலான முயற்சியைக் குறிக்கும். தாளாண்மை உடையவன் மட்டுமே "பிறரை உபசரித்து அவர்களின் தேவைகளை நிறைவு செய்யக்கூடியவன் நான்" என்ற இறுமாப்பு அடையத் தகுதியுடையவன்; தாளாண்மை இல்லாதவன் பிறரை உபசரித்து அவர்களின் தேவைகளை நிறைவுசெய்ய முயல்வது நெஞ்சுரமற்ற பேடி வாட்போர் புரிவது போன்றதாகும் என்பனவே இக்குறள்களின் கருத்தாகும்.

மேற்குறித்த நான்கு குறள்களிலுமே வேளாண்மை என்பது பிறரை உபசரித்தல், அவர்களின் தேவையறிந்து அவற்றை நிறைவுசெய்தல் என்ற பொருளில் பயன்படுத்தியுள்ளமையைக் காணலாம். அறத்துப்பாலில் இடம்பெற்றுள்ள அதிகாரத் தலைப்புகளே இதனை உணர்த்தும். குறிப்பாக, ஒப்புரவறிதல் என்ற அதிகாரத் தலைப்பில் இடம்பெற்றுள்ள ஒப்புரவு என்ற சொல் சமாதான சகவாழ்வு, பிறருடன் இணங்கி நடத்தல், பொதுநலனுக்காகத் தன்முனைப்பைக் குறைத்துக்கொண்டு செயல்படுதல், ஒரு குழுவாகக்கூடி எடுத்த முடிவுக்குக் கட்டுப்படுதல் போன்ற உயரிய பண்புநலன்களைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். திருக்குறள் எத்தகைய

வாசகர்களை முன்னிறுத்தி எழுதப்பட்டது; எப்படிப்பட்ட பண்பு நலன்களை முன்னிறுத்துகிறது என்பவற்றை ஆராய்ந்தால், வேளாண்மை என்ற சொல் திருக்குறளில் உயர்ந்த பொருளில் பயன்படுத்தப்படுவது குறித்த சிக்கல் எளிதில் தீர்ந்துவிடும்.

திருக்குறள் ஒரு நீதி நூல்; வேளாண் மாந்தர் எழுச்சிபெற்ற காலகட்டத்தில் விவசாயப் பொருளாதாரத்தை அடிப்படையாகக்கொண்ட ஓர் அரசமைப்பினை இலட்சியபூர்வமான ஒன்றாக முன்னிறுத்துகிற நூல். அரசியல் தொடர்பான நீதிகளைக் கூறுகின்ற பொருட்பாலில் முதல் அதிகாரமான இறைமாட்சியில் ஓர் அரசின் ஆறு அங்கங்களைக் குறிப்பிடும்போது கருவூலம் (அல்லது வருவாய்த் துறை) என்ற அங்கத்தைக் 'களஞ்சியம்' என்ற பொருளில் 'கூழ்' என்ற சொல்லால் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். பொருட்பாலில் பொருள் செயல்வகை என்ற அதிகாரத்தில் ஒரே ஓரிடத்தில் உலகுபொருள், அதாவது சுங்க வரியால் கிடைக்கின்ற வருமானம் குறிப்பிடப்படுகிறது. வாணிகத்தின் இன்றியமையாமை பொருட்பாலில் வலியுறுத்தப்படவில்லை. அறத்துப்பாலில் நடுவுநிலைமை அதிகாரத்தில்,

*வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்*
*பிறவும் தமபோல் செயின்*

- என்ற ஒரே ஒரு குறளில்தான் வாணிகம் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. பொருட்பாலில் ஓர் அரசுக்கு அடிப்படையான கூழ் (களஞ்சியம்) உருவாக்குகின்ற துறையாக உழவு முதன்மைப்படுத்திக் குறிப்பிடப்படுகின்றது. கொற்றக்குடையுடன் உலா வருகின்ற அரசர்களும் உழவர்களின் ஏர்க்கலப்பையின் நிழலில்தான் தங்கள் அரசாட்சியைச் செலுத்த முடியும் என்று பொருள்படுகின்ற,

*பலகுடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பார்*
*அலகுடை நீழலவர்*

- என்ற குறள் உழவு என்ற அதிகாரத்தில் இடம்பெற்றுள்ளது.

திருக்குறள் களப்பிரர் ஆட்சியின் தொடக்கக் கட்டத்தில், கி.பி. 4ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இயற்றப்பட்ட நூலாகவே இருக்க வாய்ப்புள்ளது. விவசாயப் பொருளாதாரத்தை அடித்தளமாகக்கொண்ட ஓர் அரசமைப்பினை முன்னிறுத்துகின்ற ஒரு நீதிநூலில் வேளாண்மை என்ற கருத்தோட்டத்தின் சிறப்பான கூறுகள் மட்டும் வெளிப்படுத்தப்படுவது இயல்புதானே.

இந்த இடத்தில் மற்றொரு வரலாற்றுத் தரவினைக் கவனத்தில் கொள்வது பொருத்தமாகும். கி.பி. 4ஆம் நூற்றாண்டு முதல் 7ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் காசுகள் அச்சிட்டுப் புழக்கத்தில் விடப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், கேரள மாநில (மேலைக் கடற்கரை) வணிக நகர்களைவிடத் தமிழகத்தின் வணிக முதன்மை கி.பி. 3ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் அதிகரித்தது என்பதற்குச் சான்றாக ரோமானிய வெள்ளி தினார்கள் அதிக எண்ணிக்கையில் தமிழகத்தில் கண்டறியப்பட்டுள்ளன எனத் தெரிகிறது. வெளிநாட்டு வாணிகத் தொடர்பு பெருகிய அதே வேளையில் உள்நாட்டு அரசு விவசாயப் பொருளாதாரத்தை அடித்தளமாகக் கொண்ட அரசாகவே இருந்தது என்பதற்கு இது முதன்மையான சான்றாகும்.[1]

யதார்த்தமான, நடைமுறையில் இருந்த வாழ்வியல் நெறிகளை நீதிநூலின் கண்ணோட்டத்தில் இல்லாமல் ஓரளவு அறச்சார்புடன் இலக்கணப்படுத்தும் தொல்காப்பியத்தில் வேளாண்மை என்பது விருந்துபசாரம் என்ற பொருளிலேயே பயன்படுத்தப்படுகின்றது. களவுக் காலத்தில் தோழி, தலைவி ஆகியோரது கூற்று நிகழ்கின்ற சந்தர்ப்பங்களைப் பட்டியலிடும்போது, “வேளாண் எதிரும் விருந்தின்கண்” தலைவி பேசுகின்ற சந்தர்ப்பம் வாய்க்கும் என்றும், “வேளாண் பெருநெறி வேண்டிய இடத்து”த் தோழிக்குப் பேசுகின்ற சந்தர்ப்பம் வாய்க்கும் என்றும் தொல்காப்பியம் களவியல் நூற்பாக்கள் 16, 24 ஆகியவை குறிப்பிடுகின்றன.

களவுக் காலத்தில் காதலன் காதலியின் வீட்டில் விருந்தினனாகத் தங்கிச் செல்வதுண்டு. அப்போது தலைவியுடன் களவுப் புணர்ச்சி மேற்கொள்வதும் உண்டு. இதுவே, வேளாண் எதிரும் விருந்தாகும். வேளாண் பெருநெறி என்பதும் இத்தகைய விருந்து உபசாரமே ஆகும். இந்த இலக்கணத்திற்கு

உரிய சங்க இலக்கிய எடுத்துக்காட்டுகள் என “நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்” எனத் தொடங்கும் அகநானூற்றுப் பாடலும் (பா. 300) “பன்னாள் எவ்வம் தீர” எனத் தொடங்கும் அகப்பாடலும் (பா. 340) உரையாசிரியர் நச்சினார்க்கினியரால் மேற்கோள் காட்டப்படுகின்றன.[2] விருந்துபசாரம் என்பது தொல்காப்பியத்தில் களவு மணம் தொடர்பான வேளாண் நெறியாகக் குறிப்பிடப்படுவது கவனிக்கத்தக்கது. இது “வேளாண் பெருநெறி” என்று குறிப்பிடப்படுவதன் காரணம் ஆராயத்தக்கது.

பாணர், பொருநர் போன்றோருடைய இசைக்கலை, ஆடற்கலை மரபுகள் நாட்டுப்புறக் கலை வடிவங்கள் ஆகும். இவற்றைப் பொதுவியல் என்ற பிரிவில் வகைப்படுத்துவது மரபு. ஆனால், வேளாண் வாயிலோரின் கலை மரபு என்பது ‘வேத்தியல்’ என்று வகைப்படுத்தப்படுகிற, வேந்தர்களின் அரசவை சார்ந்த அரங்கக்கலை மரபாகும். இத்தகைய ஆடல் பாடல் கலை வடிவங்களால் தலைமகனை மகிழ்வித்து விருந்துபசாரம் செய்து கூடுவதே வேளாண் பெருநெறி எனத் தொல்காப்பியரால் கூறப்பட்டிருக்க வேண்டும். இவ்வாறு நாம் பொருள்கொள்வதற்கு இரண்டு ஆதாரங்கள் உள்ளன. “தாவில் நல்லிசை” எனத் தொடங்கும் தொல்காப்பிய நூற்பாவில் (புறத்திணையியல்: 36) ஆற்றுப்படை என்ற துறையைக் குறிப்பிடும்போது தலைவனிடம் ஆற்றுப்படுத்துவோராகக் கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும் குறிப்பிடப்படுகின்றனர். இதற்கு விளக்கம் கூறுகின்ற நச்சினார்க்கினியர், “கூத்தர் எனப்படுவோருக்குச் சாதி வரையறை இல்லை” என்றும், “பாரசவரும், வேளாளரும் பிறரும் அவ்வாடல் தொழிலுக்கு உரியோர்” என்றும் விளக்குகிறார்.[3] இத்தகைய வேளாளக் கூத்தர்களே பரிசில் நாடி வருவோரைத் தலைமகனிடம் ஆற்றுப்படுத்தும் வேளாண் வாயிலோர் ஆவர். இவர்களுள் பலர் பழங்குடி நிலையினரான கிணைப் பொருநர், பறையடித்தும் யாழிசைத்தும் பாடும் பாணர் ஆகியோராக இருந்து அரசு அதிகார வர்க்கத்தின் அங்கமாக மாறியிருக்க வேண்டும். எனவேதான், ‘வேளாண் பெருநெறி’ என்று இத்தகைய செவ்வியல் நெறி குறிப்பிடப்பட்டுள்ளது எனத் தோன்றுகிறது.

கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் திவாகர நிகண்டு ‘வேளாளர் அறுதொழில்’ பட்டியலில் குயிலுவம் என்பதையும் ஒன்றாகக் குறிப்பிட்டுள்ளது. இச்சொல் ‘குஷீலவ’ என்ற வடிவில் அர்த்தசாஸ்திரத்தில்

(அதிகரணம் 1, அத்தியாயம் 3) பயன்படுத்தப்படுகிறது. திவாகரம் குறிப்பிடுகின்ற அறு தொழில்களாவன: உழவு, பசுக்காத்தல், வாணிகம், இரு பிறப்பாளர்க்கு ஏவல் செய்தல், காருகம், குயிலுவம் ஆகியன ஆகும். இவற்றை சூத்திரர்க்குரிய ஆறு தொழில்களாக அர்த்தசாஸ்திரம் வகைப்படுத்துகிறது. இருபிறப்பாளர் என்பது பிராம்மணர், சத்திரியர், வைசியர் ஆகிய மூன்று வர்ணத்தவரையும் குறிப்பதாகவே அர்த்தசாஸ்திரம் பொருள்படுத்தியுள்ளது. காருகம் என்பது 'காருக கர்ம' என்ற வடிவிலும், குயிலுவம் என்பது 'குஷீலவ கர்ம' என்ற வடிவிலும் இடம்பெற்றுள்ளன.[4] காருகம் என்பது நெசவுத் தொழிலைக் குறிக்கும் என்ற பொருள் விளக்கம் சிலப்பதிகாரக் குறிப்பிலிருந்து (5:16-17) கிடைக்கிறது. குஷீலவ என்ற சொல் பாணன் (bard), பாடகன், நடனக்காரன், நடிகன், செய்தி கொண்டு செல்லுவோன் (வாயிலோன்) ஆகியோரைக் குறிக்கும் என்று சமஸ்கிருத அகராதி பொருள் கூறுகிறது.[5] 'குயிலுவம்' என்பது குஷீலவரின் தொழிலையே குறிக்கும் என்பது வெளிப்படை.

இவ்வாறு ஆடல் பாடல் மூலம் மகிழ்வித்தல், விருந்துபசாரம் செய்தல் போன்றவற்றினை விருந்துபசாரத் தொழில் (hospitality industry) என்றே தற்காலத்தில் பெயரிட்டுள்ளனர். வேற்று நாட்டுத் தூதுவர்களை மகிழ்வித்தல், அந்நாடுகளை நட்பு நாடாக ஆக்கிக்கொள்ளுதல் ஆகிய நோக்கங்கள் கொண்ட இத்தகைய விருந்துபசாரத் துறைப் பணியாளர்கள் அல்லது அரசவை வரவேற்பாளர்களே வேளாண் வாயிலோர் எனலாம். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் வேளாளர் குல நாயன்மார் ஒருவர் பெயரே 'வாயிலார் நாயனார்' என்பதாகும்.

இது இவருடைய குடிப்பெயர் எனப் பெரியபுராணம் (கறைக்கண்டன் சருக்கம், பா. 30-31) குறிப்பிடுகிறது.

*தொன்மை நீடிய சூத்திரத் தொல்குல*
*நன்மை சான்ற நலம் பெறத் தோன்றினார்*
*வாயிலாரென நீடிய மாக்குடித்*
*தூய மாமரபின் முதல் தோன்றியே*
*நாயனார் திருத் தொண்டின் நயப்புறு*
*மேயகாதல் விருப்பின் விளங்குவார்*

வேளாளக் கூத்தர்கள் முதலிய அரசவைப் பணியாளர்களை வாயிலார் குடியினர் எனக் குறிப்பிடப்படுவது வழக்கமானதன் விளைவாக வாயிலோன் என்ற சொல்லே தமிழ்க் கூத்தனைக் குறிக்கும் எனக் கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பிங்கல நிகண்டு குறிப்பிட நேர்ந்தது. வாயில் என்ற சொல் தலைமக்களுடைய அகத்திணை சார்ந்த செயல்பாடுகள் குறித்துத் தூது செல்வோர் என்ற பொருளிலிருந்து வளர்ச்சியுற்று அரசமைப்புச் சார்ந்த தூதர்கள் என்ற பொருளையும் பெற்றுவிட்டமை இதனால் தெரிகிறது. கி.பி. 6-7ஆம் நூற்றாண்டுகள் அளவில் எழுதப்பட்ட பெருங்கதையில் (1:37:88-89) அரசவையில் நிகழும் கூத்து 'வாயிற்கூத்து' என்றே குறிப்பிடப்படுகிறது. 'வாசல் கேள்வி' என்றாலே அரச ஆணையைக் கேட்டு எழுதுகின்ற அரசவை அலுவலரைக் குறிக்கின்ற ஒரு தொடராகக் கி.பி. 10ஆம் நூற்றாண்டைய கல்வெட்டுகளில் பயன்படுத்தப்படுகிறது.[6]

அரசு சார்ந்த விருந்துபசாரத் துறை அலுவலர்களாகத் தம் நிலையை உயர்த்திக்கொண்ட வேளாண் வருணத்தவர் அரச (சத்திரிய) வருண அந்தஸ்தை மட்டும் தாங்கள் பெறவில்லையே தவிர, அரசவையில் ஆளும் வர்க்கத்தவர்க்குரிய பெருமிதத்துடன் நடந்துகொள்பவர்கள் என்பதை உணர்த்தும் வகையில் ஆடை கீறிச் சிலந்தி காட்டியோர் என்று தம் குல மூதாதை ஒருவரின் பெருமிதமான நடத்தையைக் குறிப்பிடுகின்றனர். இது குறித்த கதையாவது: வேளாளர் குல மூதாதை ஒருவர் தொடைப் பகுதியில் நரம்புச் சிலந்தி நோய் வந்து அவதிப்பட்டார். அந்த நிலையிலேயே ஒருநாள் அவர் அரசவையில் அமைச்சர், சேவகர் போன்ற பரிவாரத்தாருடன் இருக்கும்போது, அரசவைக்கு வந்திருந்த மருத்துவர் ஒருவர் இவர் நரம்புச் சிலந்தி நோயால் அவதிப்படுவதைக் கேள்விப்பட்டு அதனைத் தாம் குணப்படுத்துவதாகக் கூறி நரம்புச் சிலந்திப் புண்ணைப் பரிசோதிக்க விரும்பினார். அரசவையில் பலர் முன்னால் ஆடையைத் தூக்கித் தொடையைக் காட்டுவது கண்ணியக் குறைவானது என்று கருதிய வேளாளர் குல மூதாதை தாம் அணிந்திருப்பது விலை உயர்ந்த ஆடை என்பதையும் பொருட்படுத்தாமல் தொடைப் பகுதியில் அதனைக் கிழித்து மருத்துவரிடம் தம் நரம்புச் சிலந்தியைக் காட்டினார். இதனை ஆறுநாட்டு வேளாளர்களின் தாமிரப் பட்டய நகல் பின்வருமாறு குறிப்பிடுகிறது:

*அரசனென்னு மவ்வண்ணம் தவிர விரவிய சிலந்தி தான் பட வேண்டி ஆடை கீறி அச்சபை மகிழ நாடிய துடையில் காட்டிய நண்போர்.*[7]

இத்தகைய பரிணாம வளர்ச்சி என்பது அரசியல் மாற்றத்தினால் விளைந்த சமூகவியல் மாற்றமே என்பதை நாம் எளிதில் உணரலாம். அதே வேளையில், வேளாண்மை என்பது ஆடல் பாடலுடன் நிகழ்த்தப்படும் விருந்து உபசாரமாகவே தொடங்கிற்று என்பதை உணர்த்துகின்ற எச்சங்களாகச் சில சொல் வழக்குகள் இன்றும் நீடித்து வருகின்றன. மேளம் என்ற சொல் இசைக் கருவிகளின் தொகுதி, இசைக் கருவிகளை இயக்குதல் போன்ற பொருள்களில் இன்றுவரை பயன்படுத்தப்பட்டு வருவது இதனை உணர்த்தும். மேளம், வேளம் – இரண்டு சொற்களும் ஒரே கருத்தோட்டத்தின் அடிப்படையில் தோன்றியவையாகவே இருப்பதால்தான் இவை இரண்டு நிறுவனங்களின் பிற்கால வளர்நிலைகள் முற்றிலும் வேறுபட்டவையாய் அமைந்தபோதிலும், இவற்றிற்கு இடையிலான பொருள், தொடர்பு ஓர் எச்சமாக நீடித்து நிற்கிறது.

விருந்துபசாரம் என்பது அறம் சார்ந்த ஒன்றாக, குறிப்பாக இல்லறம் சார்ந்த ஒன்றாகக் கையாளப்படும்போது விருந்தினரை உபசரிக்கின்ற இல்லறத்தார்க்குரிய பஞ்சமகா யக்ஞங்களில் ஒன்றாக மாறுவதைத் திருக்குறளில் காணமுடிகிறது.

*தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு*
*ஐம்புலத்தா ஓம்பல் தலை*

தொல்காப்பியம் கற்பியலில் (நூற்பா 11) “வல்லிதின் விருந்து புறந்தருதல்” என்ற துறை குறிப்பிடப்படுகிறது. சிலப்பதிகாரத்தில் (16:72-73) இல்லறத்தார்க்குரிய கடமைகளுள் ஒன்றாகக் கண்ணகி குறிப்பிடுகின்ற “தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடல்” என்பது இத்தகைய இல்லற தர்மங்களுள் ஒன்றே. ஆனால், திருக்குறள் பொருட்பாலில் குறிப்பிடப்படுகின்ற வரைவின் மகளிர், சூது ஆகிய அதிகாரங்கள் சங்க கால வாழ்வியலில் அனுமதிக்கப்பட்ட, வேளாண் பெருநெறி சார்ந்த விருந்தோம்பல் நெறிமுறைகளே என்பதையும் நீதிநெறி சார்ந்த ஓர் அரசு இத்தகைய துறைகளின் மூலம் வருவாய் ஈட்டக்கூடாது என்ற கருத்து

இவ்வதிகாரங்களில் திருவள்ளுவரால் வலியுறுத்தப்படுவதையும் நாம் உணரலாம். சூது என்பது வேளாண் பெருநெறி சார்ந்ததே என்பதற்குச் சூதில் கிடைத்த பொருளைக் கொண்டு சிவபெருமானுக்குத் திருப்பணி புரிந்த திருவேற்காடு மூர்க்க நாயனார் என்ற வேளாளரைப் பற்றிய பெரியபுராணக் குறிப்பே (வம்பறா வரிவண்டுச் சருக்கம் 1720-1731) சான்றாகும். பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றாகிய திரிகடுகம் (பா. 42) வேளாண் குடிக்கு எது அழகு என்ற நீதியை வரையறுத்துக் கூறுகையில் சூதாடுவதால் கிடைக்கிற பொருளை விரும்பாதிருத்தல் (கழகத்தால் வந்த பொருள் காமுறாமை) எனக் குறிப்பிடுகிறது. இதில், திருக்குறள் சுட்டுகின்ற நீதியின் தொனி அமைந்திருப்பதைக் காணலாம்.

யதார்த்தத்தில் வேளாண்மை என்பதன் முதன்மையான தன்மைகளுள் ஒன்றாகக் குயிலுவம் (இசைக்கருவிகளை இசைத்தல்) என்பதைத் திவாகர நிகண்டு குறிப்பிடுவது போலவே, பாரதி தீப நிகண்டு என்ற பிற்கால நிகண்டு மெய்யுபசாரம் என்பதையும் ஒன்றாகக் குறிப்பிடுகிறது. இத்தகைய மெய்யுபசாரங்களுள் தலைமக்களின் (அல்லது விருந்தினரின்) உடலில் நறுமணத் தைலங்களைப் பூசி உடலைப் பிடித்துவிட்டு (மசாஜ் செய்து) நீராட்டுதலும் ஒன்றாகும். இத்தகைய நீராட்டுவித்தல் நிகழ்கின்ற விடுதிகளை 'மன்னரின் காதலிமார் வேளம்' என்றே கம்பர் குறிப்பிட்டதாகத் தமிழ் நாவலர் சரிதை குறிப்பிடுகிறது.[8] 'மஞ்சனத்தார் வேளம்' என்ற பெயரிலேயே மேற்குறிப்பிட்ட மசாஜ் தொழில் நிறுவனம் சோழர் காலக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றது.[9]

சங்க காலத் தலைமக்களது அக வாழ்க்கையில் வாயிலோராக செயல்பட்டவர்களுள் வருண அந்தஸ்தில் உயர்ந்தவராகக் கருதப்பட்ட பார்ப்பன வாயிலோர் முதல் பாணர், பாங்கர் என்று பலவகைப்பட்டோர் இருந்துள்ளனர். இவர்களுள் பார்ப்பன வாயிலோர் "பேணுதகு சிறப்பின் பார்ப்பான்" என்று தொல்காப்பியத்திலும் (பொருளதிகாரம், செய்யுளியல், 182) "வெறிது நின் புகழ்களை வேண்டார் இல் எடுத்து ஏத்தும் அறிவுடை அந்தணன்" என்று கலித்தொகையிலும் (பா. 72:17-18) குறிப்பிடப்படுகின்றனர். இத்தகைய பார்ப்பன வாயிலோர்களுள் பலர் பாணர் குலத்தவருடன் மிக நெருங்கிய உறவு கொண்டு வாழ்ந்தமையைச் சிலப்பதிகாரம் புறஞ்சேரி இறுத்த காதை (வரி. 56-105) குறிப்பிடுகிறது. இத்தகைய பார்ப்பன வாயிலோர்,

பாணர் குல வாயிலோருக்கிடையே நிலவிய மண உறவுகளின் விளைவாகவே வள்ளுவர் குலம் என்ற கணியர் குலம் உருவாகியிருக்க வாய்ப்புண்டு. இவ்வாறு உருவான ஆசான் வர்க்கம் சங்க காலத்தில் பிராம்மண வர்ணம் சார்ந்த பிரிவாகவே அங்கீகரிக்கப்பட்டுப் பின்னர் களப்பிரர் ஆட்சிக் காலத்தில் வேளாள வர்ணத்தவர்க்குக் குல குருக்கள் போன்று செயல்பட்டமையால்தான் பிற்கால வேளாளர் மெய்க்கீர்த்திகளில் தம்முடைய பூர்விக குல குருக்களுடன் தமக்கு இருந்த உறவினை மறைமுகமாக அங்கீகரிக்கும் வகையில் பாணன் பிணம் சுமந்தோர், பறையனோடு சோறுண்டோர் என்று வேளாளர்கள் பறைசாற்றினர் போலும்.

**(தொடரும்)**

**அடிக்குறிப்புகள்:**

[**1**] கேரள மாநிலத் தொல்லியல் துறையின் மேனாள் இயக்குநர் தியாக. சத்தியமூர்த்தி அவர்கள் ரோமானியக் காசுகள் குறித்து விரிவாக ஆய்வு செய்துள்ளார். அவருடனான உரையாடலில் கிட்டிய தகவல்.

[**2**] தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், பகுதி 2, பக். 48, 108. பதிப்பாசிரியன்மார்: தி.வே. கோபாலையர், ந. அரணமுறுவல், தமிழ்மண் பதிப்பகம், சென்னை-17, 2003.

குறிஞ்சி, நெயதல் திணைப் பாடல்கள் சிலவற்றில் களவுப் புணர்ச்சியோடு தொடர்புடைய இத்தகைய விருந்தயர்தல் மரபு பதிவுபெற்றுள்ளதைத் திரு. ராஜ் கௌதமன் பதிவுசெய்துள்ளார். பார்க்க: ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், பக். 70-73, தமிழினி, சென்னை-14, 2009.

[**3**] தொல்காப்பியம், பொருள்., நச்சினார்க்கினியம், பகுதி 1, பக். 415.

[**4**] கௌடலீயம் பொருணூல், தமிழ் மொழிபெயர்ப்பு, முதற்பகுதி, பக். 27, அண்ணமலைப் பல்கலைக்கழகம், 1979. காருகம் என்பது சிற்பத் தொழிலைக் குறிக்கும் என்றும், தமிழக வேளாளர்கள் அர்த்தசாஸ்திரத்தில் சூத்திரர் என்று குறிப்பிடப்படும் வர்ணத்தவர் ஆகார் என்றும்

அர்த்தசாஸ்திரத்தின் இப்பகுதியை மொழிபெயர்த்த பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் இது குறித்துத் தெரிவித்துள்ள விளக்கம் தவறானதாகும். அர்த்தசாஸ்திரத்தின் இப்பகுதியில் சூத்திரர் அறுதொழில்களாகக் குறிப்பிடப்படுவன திவாகர நிகண்டுக் குறிப்புடன் துல்லியமாகப் பொருந்துவதை எனக்குச் சுட்டிக்காட்டியவர் ஆய்வாளர் ப்ரவாஹன் ஆவார்.

[**5**] p. 156, The Students Sanskrit English Dictionary, V.S. Apte, Motilal Banarsidass, 1967.

[**6**] South Indian Inscriptions, Vol XIX, No. 169.

[**7**] ஆறு நாட்டு வேளாளர்கள் தாமிரப் பட்டய நகல், குமாரி லீலா, கல்வெட்டு காலாண்டிதழ், இதழ் 16, நள ஆண்டு தைத் திங்கள், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை.

[**8**] *கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப் பானங் குலக்கவிக்குக்*
*காளம் பிடித்திடிற் சின்னம்படும் மன்னர் காதலிமார்*
*வேளம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்க வெம்பேய்க் கிளம்பேய்*
*தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே*

- என்ற பாடல் தமிழ் நாவலர் சரிதையில் குறிப்பிடப்படுகிறது. தாதன் எனும் வணிகனைத் தமக்கு விருது பிடிக்கும்படி கூறி கம்பர் இக்கவிதையைப் பாடியதாகக் குறிப்பிடப்படுள்ளது.

[**9**] South Indian Inscriptions, Vol. XIX, No. 193.

**[3]**

## உலக அறவியும் உத்தம நீதியும்

"வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான், அவனைக் கேளாக (உறவாகக்) கொண்டு வாழ்தல் இனிது" என்று திரிகடுகம் (பா. 12) கூறுகிறது. விருந்தோம்பல் என்பது ஐவகை வேள்விகளுள் (பஞ்ச மகாயக்ஞம்) ஒன்று என்ற கருத்து திருக்குறளில் அழுத்தமாகப் பதிவுபெற்றுள்ளது. விருந்தோம்பல் அதிகாரத்திலேயே பா. 7,8 ஆகியவற்றில் இக்கருத்து தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

*இனைத்துணைத் தென்பதொன்றில்லை விருந்தின்*
*தினைத்துணை வேள்விப் பயன்*

*பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி*
*வேள்வி தலைப் படாதார்*

வேள்வி என்பது வைதிக சமயத்தில் உயர் வர்ணத்தார் மட்டுமே மேற்கொள்வதற்குரிய புனிதச் சடங்காகக் கருதப்பட்டுவந்தது. உழவுத் தொழிலை 'ஏர்க்கள வேள்வி' என்று உருவகமாகக் குறிப்பிடுவது மிகப் பழைய மரபே. அப்படியிருக்கையில், வேளாண்மை என்ற கருத்தோட்டத்தையும் வேளாள வருணத்தையும் வேள்வியுடன் தொடர்புபடுத்துவதுதானே பொருத்தமுடையது என்ற கேள்வி எழுவது இயல்பு. இக்கேள்விக்கு என்ன விடையென்று இப்போது ஆராய்வோம்.

'வேள்' என்ற வினைச்சொல் 'விரும்பு' என்ற பொருளுடையது. வேட்டல், வேட்கை, வேண்டுதல் முதலிய பல சொற்கள் இவ்வேர்ச் சொல்லிலிருந்து தோன்றியவையே. வேள்வி என்பதைச் சமஸ்கிருதத்தில் 'இஷ்டி' என்ற சொல்லால் (புத்திரகாமேஷ்டி என்பது போல) குறிப்பிடுவதுண்டு. இது இஷ்டம் (விருப்பம்) என்ற கருத்தின் அடிப்படையில் உருவான சொல்லே. எனவே வேளம், வேளாட்டி, வேளாண்மை என்பவையெல்லாம் தலைமக்கள் விரும்பிச் சேர்த்துக்கொண்ட பெண்டிரின் வாழ்விடத்தோடு தொடர்புடைய

சொல்லாட்சிகளே எனக் கொள்வதில் சிக்கலில்லை. போர்களின்போது கைப்பற்றிச் சேர்க்கப்பட்ட உயர்குடிப் பெண்டிர் தவிரத் தாமே விரும்பிச் சேர்ந்தோர் பலரும் வேளத்தில் இருந்திருப்பர் என்பதில் ஐயமில்லை.

வேட்கை என்ற சொல் காமுறுதல் என்ற பொருளில் தொல்காப்பியத்தில் (களவியல் 9, பொருளியல் 17) பயன்படுத்தப்படுவது இது தொடர்பாகக் கவனிக்கத்தக்கது. ஆனால், வேளிர் குலத்தவனைக் குறிக்கும் 'வேள்' என்ற பெயர்ச்சொல் இதனோடு தொடர்புடையதாகத் தெரியவில்லை. 'வெள்' (வெளிச்சம்) என்ற சொல்லுடன் இது தொடர்புடையதாகக் கொண்டால் வெள்ளி என்ற உலோகத்தைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படுவதும், ராஜ் என்ற சொல்லுடன் உறவுடையதாகக் கருதப்படுவதுமான 'ரஜத' என்ற வடசொல்லுக்குச்[1] சமமான தமிழ்ச் சொல்லாக இதனைக் கருதலாம்.

வேளிரை யது குலத்தார் அல்லது யாதவர்களுடன் தொடர்புறுத்துவது பொருத்தமே எனக் கொண்டால் கடலைக் குறிப்பிடுவதற்குக் கன்னட மொழியில் வழங்கிய 'வேளா' என்ற சொல்லிலிருந்து[2] வேள் என்ற பெயர்ச்சொல் தோன்றியதாகக் கருதலாம். 'யாதஸ்பதி' என்ற சமஸ்கிருதச் சொல்லுக்குக் கடல் எனப் பொருள்.[3] கன்னடத்தைத் தாய் மொழியாகக் கொண்ட மேலைச் சாளுக்கியரை 'வேள் குலத்தார்' என்றும், மேலைச் சாளுக்கிய நாட்டை 'வேள் புலம்' என்றும் கி.பி. 11ஆம் நூற்றாண்டுத் தமிழ்க் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[4] எனவே, வேளிர் குலத்தவர்க்குரிய 'வேள்' அரசு பதவியுடன் தொடர்புடையதே தவிர, வேட்கை என்ற கருத்தோட்டத்துடன் தொடர்புடையதன்று.

வேளாண்மை என்ற பண்புநலன் விருந்தோம்பல என்ற செயல்பாட்டுக்கு மிகவும் உகந்ததாக அமைந்ததால் வைதிக வேள்விக்கு மாற்றாக ஐவகை வேள்விகளை ஏற்ற சமணம், பௌத்தம் முதலிய அவைதிக மதங்கள் வேளாண்மைக்கு முதன்மையளித்தன. யாகத்துக்கு மாற்றாகக் கொடை அல்லது தானம் என்பதை அவைதிக மதங்கள் முன்வைத்தன. நூறு வேள்விகள் செய்பவன் இந்திர பதவியடைகிறான் என்ற வைதிகக் கருத்தோட்டத்துக்கு மாற்றாகப் பெருங்கொடையாளி இந்திர பதவியடைகிறான் எனச் சமணமும் பௌத்தமும் சித்திரித்தன.

தர்மங்களுள் உயர்ந்தது தானதர்மம் என்ற கருத்தின் அடிப்படையிலும் தானத்தில் உயர்ந்தது அன்னதானம் - பசிப்பிணி தீர்த்தல் - என்ற கண்ணோட்டத்தின் அடிப்படையிலும் அமுதசுரபி கொண்டு உயிர்களின் பசிப்பிணி தீர்த்த ஆபுத்திரனின் அருஞ்செயலால் இந்திரனின் பாண்டு கம்பளம் நடுங்கிற்று என்றும், தனது பதவிக்குப் போட்டி உருவாகிவிட்டதை உணர்ந்த இந்திரன் பெரும் மழை பெய்வித்து உலகைச் செழிப்பாக்கிப் பசிப்பிணி என்பதே இல்லாமற் செய்தானென்றும் புத்த சமயக் காப்பியமான மணிமேகலை (14:21-57) குறிப்பிடுகிறது.

பௌத்தம் விருந்தோம்பல் என்ற வேள்வியை இல்லற தர்மமாக மட்டும் கொள்ளாமல், மடைப்பள்ளியுடன் கூடிய மடாலயங்களின் மூலம் உலகத்தவரின் பசிப்பிணியைத் தீர்க்கிற துறவற தர்மமாகவும் மாற்றிற்று.[6] இத்தர்மத்தை நிறைவேற்றுவதற்கு ஓர் உயர் வர்ணத்து ஆணினைத் தேர்வு செய்யாமல், துறவு மேற்கொள்வதற்குத் தகுதிபடைத்த சுதந்திர வர்ணத்தவரான முதல் மூன்று வர்ணத்தவர் போலன்றி, பொருள் கொடுத்து விலைக்கு வாங்கப்படத் தக்கவள், அதாவது அடிமைப் பெண் என்று அரச வர்ணத்தவரால் ஏளனம் செய்யப்படும்[7] ஓர் அரங்கக் கூத்தியைத்[8] தேர்வு செய்தது. அவள், புகார் நகரின் சுடுகாட்டையடுத்திருந்த ‘உலக அறவி’ என்ற அம்பலத்தில்தான் தனது அன்னதானத்தைச் செய்யத்தொடங்கித் தொடர்ந்து செய்துவந்தாள்.[9] இந்த அம்பலம், எந்த வேறுபாடுமின்றி அனைவருும் புகுவதற்கு வசதியாகத் திறந்தேயிருக்கும் வாயிலைக் கொண்டது.[10]

புகார் நகரைக் கடல் கொண்டபின்னர் வஞ்சி நகருக்குச் சென்ற மணிமேகலை, காஞ்சியில் கடும் பஞ்சம் நிலவுவதாகக் கேள்விப்பட்டு அமுதசுரபியுடன் காஞ்சிக்குச் செல்கிறாள். துணையிளங்கிள்ளி என்ற சோழ அரசன் காஞ்சியில் கட்டுவித்த புத்த சைதன்யத்தைத் தொழுது அவன் உருவாக்கிய ‘தருமத வனம்’ என்ற சோலையை அடைந்து, அந்தச் சோலையில் தனது அன்னதானத்தைத் தொடங்கி அதனை அறச்சாலையாக்குகிறாள்.[11]

புத்த சமயம் தோற்றுவித்த இம்மரபு, காஞ்சியில், கி.பி. 8ஆம் நூற்றாண்டில் பௌத்தம் அழிந்த பின்னரும்[12] சைவ தர்மமாகத் தொடர்ந்தது என்பது,

“கிராமக் கோயிலாகிய காமாட்சி கோட்டத்து அறச்சாலை இருக்கையில், சிவனே நீர் ஏன் பிச்சை எடுத்துக்கொண்டு அலைகிறீர்?” என்ற சுந்தரர் தேவார[13] வினாவால் தெரியவருகிறது. கி.பி. 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழாரோ, மணிமேகலையின் பிட்சுணிக் கோலத்துடன் இல்லற தர்மமான விருந்தோம்பல் மரபைத் திறம்பட இணைத்து, கணவனுடன் இணைவதற்காகத் தவம்புரியும் தவக்கோலக் காமாட்சியைப் படைத்து அவளையே அறம் வளர்த்த அம்மனாகவும், பெருந்தொண்டை நாட்டு முறைமையைப் பேணியவளாகவும்[14] சித்திரிக்கிறார். (அல்லது சைவக் காமாட்சியின் சித்திரத்தை முழுமைப்படுத்துகிறார்.) மனையறம் பெருக்கும் கருணையினால், காமக் கோட்டத்தில் முப்பத்திரண்டு வகைப்பட்ட அறங்களையும் அன்னை புரந்தருள்கிறாள் என்று குறிப்பிடுவதோடு நில்லாமல்,

*வீழவு மலி திருக்காஞ்சி வரைப்பின் வேளாண்*
*விழுக் குடிமைப் பெருஞ்செல்வர் விளங்கும் வேணி*
*மழவிள வெண்டிங்கள் புனை கம்பர் செம்பொன்*
*மலை வில்லிக் களித்த வளருணவின் மூலம்*
*தொழவுலகு பெறுமவள் தானருளப் பெற்றுத்*
*தொன்னிலத்து மன்னு பயிர் வேத வாய்மை*
*உழவு தொழிலாற் பெருக்கி உயிர்களெல்லாம்*
*ஓங்க வருந்தரும வினைக் குளரால் என்றும்*

என்று அவ்வறங்களை வேளாளர்களோடும், உழவோடும் தொடர்புறுத்தி உறுதிப்படுத்திவிடுகிறார். காமாட்சியன்னை வேளாளர்கள் வசம் இரு நாழி நெல் வழங்கிப் பயிர் செய்து உணவளித்து அனைவரையும் வாழ்விக்க வழிகாட்டியதாகப் பிற்காலப் பாடல்களும் குறிப்பிடுகின்றன. உழவுத் தொழிலால் விளையும் பயிர்வளம், வற்றாத அமுதசுரபி என்ற பௌத்த உருவகத்துடன் இவ்வாறு வெற்றிகரமாக இணைக்கப்பட்டது.

பௌத்தம் சத்திரிய வர்ணத்தவரைப் புறக்கணிக்கவில்லை. அரசரை முதல் வர்ணத்தவராகவும், அந்தணரை இரண்டாம் வர்ணத்தவராகவுமே பௌத்த நூல்கள் குறிப்பிடுகின்றன. “நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே மன்னன் உயிர்த்தே மலர்தலையுலகம்” என்ற மோசிகீரனாரின் (புறம். 186) அறிவிப்பு,

பௌத்தம் அங்கீகரித்திருந்த வர்ண வரிசையே சங்க காலத் தமிழகத்திலும் பின்பற்றப்பட்டிருக்க வேண்டுமென உணர்த்துகிறது.

கொடை - தானம் என்பதை அரச வர்ணத்தவர்க்குரிய உயர்ந்த பண்புநலனாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. ஈதல் என்பதை அரசர் ஐந்தொழில்களுள் ஒன்றாக இலக்கண உரையாசிரியர்களும் தவறாது குறிப்பிடுகின்றனர். பௌத்தம் இத்தகைய அடிப்படை வாழ்வியல் கூறுகளைக் கேள்விக்கு உட்படுத்தவில்லை என்றாலும், பௌத்த பிட்சுக்களின் 'சங்கம்' என்ற அமைப்பு வலிமை வாய்ந்த ஓர் அரசியல் சக்தியாக உருப்பெற்று வந்ததன் விளைவாகத் தவிர்க்கவியலாத வகையில் சில ஜனநாயக இயக்கப்போக்குகள் தோன்றின. அவற்றின் விளைவே, நாம் மேலே விவரித்த வேளாண் வர்ணத்தவரின் எழுச்சியும், அரசகுலப் பண்புநலன் இடப்பெயர்ச்சியும் ஆகும்.

அரச வர்ணத்தவரின் குறிப்பிடத்தக்க பண்புநலன்களுள் நீதி என்பதும் ஒன்றெனச் சங்க கால இலக்கியங்களாலும் பிற ஆவணங்களாலும் தெரியவருகிறது. செங்கோன்மை என்ற தொடரே நீதி தவறாத செம்மையான ஆட்சி என்றுதான் பொருள்படும். நீண்ட காலமாகத் தமக்குள் பகைகொண்டு வழக்கிட்டுக் கொண்டிருப்பவர்கள், அரசவைக்குள் புகுந்தால் அந்தக் கணத்திலேயே அவ்வழக்கு தீர்த்துவைக்கப்படும் எனப் பொருநராற்றுப்படை கூறுகிறது.[17]

பசுவிற்கு நீதி வழங்குவதற்காகத் தன் மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்ற மனுநீதிச் சோழன் பற்றிச் சிலப்பதிகாரம் (20:53; 29:17) குறிப்பிடுகிறது. இலங்கை வரலாற்று நூலான மகாவம்சம் (21:12-18) ஏலாரன் என்ற சோழ அரச குலத்தவன் கி.மு. 2ஆம் நூற்றாண்டில் இலங்கையை ஆண்ட காலத்தில் அவனது ஒரே மகன் திஸ்ஸவாபிக் குளத்துக்குத் தேரில் சென்றபோது அறியாமல் கன்று ஒன்றின்மீது தேரை ஓட்டிக் கொன்றுவிட்டான் என்றும், ஏலாரன் அவனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்று தாய்ப் பசுவுக்கு நீதி வழங்கினான் என்றும் குறிப்பிடுகிறது.

நீதி என்பது அரச தர்மத்தின் முதன்மையான கூறாகக் கருதப்பட்டது என்பதைச் சிலப்பதிகாரம் வழக்குரை காதையாலும் அறியலாம். காஞ்சி

நகரில் புத்த பிட்சுக்களின் சங்கம் நீதித் துறையிலும் ஆதிக்கம் செலுத்திற்று என்பதையும், அதனால் அரசர்களின் அதிகாரத்திற்கு அது சவாலாக விளங்கிற்று என்பதையும் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் மகேந்திர பல்லவன் இயற்றிய மத்த விலாசப் பிரகசனத்தால் அறியலாம்.[18] இந்நிலை, தொண்டை மண்டலத்தில் கி.பி. 4ஆம் நூற்றாண்டிலேயே தோன்றிவிட்டது. தொண்டை மண்டலத்தின் மிகப் பழமையான வேளாளர் சபை, பழையனூர் திருவாலங்காட்டில் இருந்தது.

கணவனால் வஞ்சித்துக் கொல்லப்பட்ட நீலி என்பவள் பேயாக அலைந்து கொண்டிருந்தாள். அவளது கணவன், மறுபிறப்பில் தரிசனச் செட்டி என்ற பெயரில் வாழ்கிறான் என்பதை அறிந்து அவனைப் பழி தீர்ப்பதற்காகப் பின்தொடர்ந்து செல்கிறாள். இரவு நேரத்தில் பழையனூர்ச் சத்திரத்தில் அவன் தங்க நேர்கிறது. நீலி, தரிசனச் செட்டியின் மனைவி என்று கூறிக்கொண்டு, அவன் தன்னைக் கைவிட்டுச் செல்ல முயல்வதாகப் பழையனூர் வேளாளர்களிடம் முறையிடுகிறாள். தரிசனச் செட்டி, அவள் தன் மனைவியல்லள் என்றும் தன்னைக் கொல்லத் துடிக்கும் பேய் என்றும் கூறி அவளைத் தன்னுடன் தங்க அனுமதிக வேண்டாமென்று வேளாளர்களிடம் மன்றாடுகிறான்.

நீலியின் கண்ணீரைக் கண்டு மனமிரங்கிய வேளாளர்கள், இரவு நேரமென்பதால் மறுநாள் காலையில் இந்த வழக்கை விசாரித்துக் கொள்ளலாம் என்று முடிவுசெய்து, தரிசனச் செட்டியின் பாதுகாப்பிற்குத் தாங்கள் பிணை ஏற்பதாக வாக்களித்து நீலி அவனுடன் தங்குவதற்கு அனுமதிக்கின்றனர். அன்றிரவில் நீலி தன் வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்கிறாள். மறுநாள் காலையில், தாங்கள் ஏமாற்றப்பட்டதை உணர்ந்த வேளாளர்கள் எழுபது பேரும், “சொன்ன சொல் காக்கத் தவறியவர்கள்” என்று தங்கள் மேல் - நீலியின் வஞ்சனை காரணமாக - சுமத்தப்படக்கூடிய பழியைக் கழுவுவதற்காகத் தீக்குளித்து உயிர் துறக்கின்றனர். இந்நிகழ்வு, கி.பி. 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திருஞானசம்பந்தரால்,

*--------------முனை நட்பாய்*
*வஞ்சப் படுத்தொருத்தி வாழ்நாள் கொள்ளும் வகை கேட்டு*

*அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே*

என்ற தேவாரப் பாடல் (முதல் திருமுறை, திருவாலங்காட்டுப் பதிகம், பா. 1) வரிகளில் குறிப்பிடப்படுகிறது. கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட பெரியபுராணம் (மும்மையால் உலகாண்ட சருக்கம், பா. 113),

*நற்றிரம்புரி பழையனூர்ச் சிறுத் தொண்டர் நவை வந்*
*துற்றபோது தம் உயிரையும் வணிகனுக் கொரு கால்*
*சொற்ற மெய்ம்மையுந் தூக்கி அச் சொல்லையே காக்கப்*
*பெற்ற மேன்மையின் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு*

என்று இந்நிகழ்வைச் சுட்டுகிறது. "தாம் அளித்த வாக்குறுதியையும் தம் உயிரையும் துலாக்கோலின் இரு தட்டுகளில் வைத்து, உயிரைக் காட்டிலும் வாக்குறுதிக்கு அதிக வலிமையிருந்தமையால் உயிரை இழந்தவர்கள்; அதன் மூலம் நீதி என்ற துலாக்கோலின் நடுநிலையைக் காத்தவர்கள் இப்பழையனூர்த் தொண்டர் குலத்தார் " (தொண்டையர்?) என்பது இதன் பொருள். வேளாளர் மெய்க்கீர்த்தியில் “நீலி பழிகழுவினோர்” என்று குறிப்பிடப்படுவோர் பழையனூர் வேளாளர்களே.

இத்தகைய ராஜநீதியை, “அடைக்கலம் அடைந்தவர்களைத் தம் உயிரைக் கொடுத்தாகிலும் காத்தல்” என்பதாகக் கொண்டு, சத்திரியர்களுக்குரிய அடிப்படைத் தன்மையான அபயதானம் என தர்ம சாஸ்திரங்கள் வகைப்படுத்துகின்றன. இதுவும் சத்திரியர்க்குரிய தானம் எனத்தக்க பண்புநலன்களுள் ஒன்றாகக் கருதப்பட்டது. புறநானூறு (பா. 43) பருந்திடமிருந்து தப்பித் தன்னிடம் அடைக்கலம் புகுந்த புறாவுக்காகத் தானே துலாக்கோல் தட்டில் ஏறியமர்ந்த செம்பியனது அருஞ்செயலை ‘வரையா ஈகை’ என்றே குறிப்பிடுகிறது.[19] இந்நிகழ்வு, சிபி ஜாதகம் என்ற பெயரில், புத்த ஜாதகக் கதைகளில், கௌதம புத்தரின் முற்பிறப்பு நிகழ்வாகக் குறிப்பிடப்படுகிறது.

இத்தகைய சத்திரிய வர்ணப் பண்புநலனை வேளாளர்களின் பண்புநலனாகச் சித்திரிக்கும் அளவிற்குச் சமுதாய மாற்றம் நிகழ்ந்ததென்றால், அத்தகைய ஒரு முன்னோடியான மாற்றம், தொண்டை

மண்டலத்தில் வ்லிமையாக வேரூன்றியிருந்த பௌத்த சங்கத்தின் அரசியல் செல்வாக்கால்தான் சாத்தியமாகியிருக்க முடியும். கி.பி. 11ஆம் நூற்றாண்டில் தொண்டை மண்டலத்தை மையமாகக்கொண்டு உருவாகி வளர்ந்த 'சித்திர மேழிப் பெரிய நாடு' எனப்பட்ட வேளாளர் கூட்டமைப்பு, தனது மெய்க்கீர்த்தியில் "உத்தம நீதி உயர் பெருங்கீர்த்தி மேழிப் பெரிய நாட்டார்" எனத் தனது பெருமையைப் பறைசாற்றுகிறது.[20] இது, மேற்குறித்த வரலாற்றின் அடிப்படையில் தோன்றிய பெருமித உணர்வே.

பதினெண் கீழ்க்கணக்கு எனப்படும் தொகுதியுள் அடங்கிய நீதி நூல்களை 'வேளாண் வேதம்' எனக் குறிப்பிடுவதன் வரலாற்றுப் பின்னணி என்ன என்பதை இனி ஆராய்வோம்.

**(தொடரும்)**

**அடிக்குறிப்புகள்:**

1. p. 462, A Student's Sanskrit English Dictionary, V.S. Apte, Motilal Banarsidas Publishers, 1968. ' ரஜத' என்ற சொல் பொன்னையும் குறிக்கப் பயன்படுத்தப்படுவதுண்டு.

2. இச்சொல் 'வேலா' என வட மொழியிலும், 'வேலை' எனத் தமிழிலும் வழங்கிற்று. கன்னட மொழி வழக்கு பற்றி அறிவதற்குப் பார்க்க: பக். 6-8, ஆவணம், இதழ் 2, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சை.
pp. 72-87, Ancient and Medieval Commericial Activities in the Indian Ocean: Testimony of Inscriptions and Ceramic Sherds, Editor: Noboru Karashima, Taisho University, Japan, 2002.

3. p. 457, A Student's Sanskrit English Dictionary. கலித்தொகையில் (105:4/5) "படுகடல் பயந்த ஆர்கலி உவகையர்" எனக் குறிப்பிடப்படுவது, இப்பொருளோடு தொடர்புடையதாகலாம்.

4. South Indian Inscriptions, Vol. V, no. 633; Vol. III, no. 160.

5. காமன், முருகன் முதலிய தெய்வங்களின் பெயர்களோடு 'வேள்' என்ற பட்டம் சேர்க்கப்படுவது, இரு வகைப் பொருள் விளக்கங்களுக்கும் ஒத்து

அமைந்துள்ளதாயினும், வேட்கையை ஏற்படுத்துகின்ற தன்மையோடு மிகவும் பொருந்துகிறது.

6. 'மடைப்பள்ளி'என்ற தொடரின் நேர்ப்பொருள், "உண்டுறை விடுதியுடன் கூடிய அறச்சாலை அல்லது கல்விச்சாலை" என்பதே. இவ்வகையில் பௌத்த பிக்ஷுக்களால் நிர்வகிக்கப்பட்ட காஞ்சிக் கடிகையே முன்னோடியான மடைப்பள்ளி அல்லது மடாலயம் எனத் தெரிகிறது.

7. *வருணக் காப்பிலள் பொருள் விலையாட்டியென்*
*றிகழ்ந்தனனாகீ நயந்தோன்* - மணிமேகலை 5:87-88
வருணக் காப்பு இல்லாதவள் என்பது, நான்காம் வருணத்திலேயே மிகவும் கீழ்ப்பட்ட பிரிவினள் என்று பொருள்படக்கூடும். வருண அமைப்புக்கு அப்பாற்பட்டவள் என்று பொருள்கொள்வது பொருந்தாதெனத் தோன்றுகிறது.

8. மணிமேகலை 24:22. கூத்தியர், வேசி (வேஷமிடுபவள்) போன்ற சொற்கள் நடனக் கலைக்கும் பரத்தையர் வர்க்கத்துக்குமிடையே நிலவிவந்த தொடர்பினை உணர்த்தும்.

9. மணிமேகலை 17:86-98.

10. பலர் புகத் திறந்த பகுவாய் வாயில் உலக அறவி - மணிமேகலை 7:92-93.

11. மணிமேகலை 28:151-238.

12. கி.பி. 8ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பரமேஸ்வர வர்ம பல்லவன் முன்னிலையில் சமணர்களுக்கும் பௌத்தர்களுக்குமிடையில் வாதம் நிகழ்ந்ததென்றும், அவ்வாதத்தில் தோற்ற பௌத்தர்கள், ஒட்டுமொத்தமாக இலங்கைக்குக் குடிபெயர்ந்தனர் என்றும் தெரியவருகிறது.

13. *காமக்கோட்டம் உண்டாக நீர்போய் ஊரிடு பிச்சை ஏற்பதென்ன ஓணகாந்தன் தளியுளீரே* - ஏழாம் திருமுறை, கச்சி ஓணகாந்தன் தளிப்பதிகம்.

14. பெரிய புராணம், மும்மையால் உலகாண்ட சருக்கம், பா. 115.

15. பெரிய புராணம், மும்மையால் உலகாண்ட சருக்கம், பா. 118.

16. பெரிய புராணம், மும்மையால் உலகாண்ட சருக்கம், பா. 212.

17. முதியோர் அவை புகு பொழுதில் தம்பகை முரண் செலவும் - பொருநர். 187-8.

18. 'தேவசோமா'என்ற காபாலினி வாய்மொழியாக இக்கருத்து சொல்லப்படுகிறது. பார்க்க: பக். 155, 'மகேந்திரவர்மன்', மயிலை சீனி. வேங்கடசாமி, பதிப்பு: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1, 1973.

19. *கூருகிர்ப் பருந்தின் ஏறு குறித்தொரீஇத்*
*தன்னகம் புக்க குறுநடைப் புறவின்*
*தபுதியஞ்சிக் சீரை புக்க*
*வரையா ஈகை உரவோன்*

கலித்தொகையில் (140:17-22) "பாம்பும் சான்றவர் அவைப்படில் உய்யும்" எனக் குறிப்பிடப்படுகிறது. இதுவும் 'அபயதானம்' என்ற பண்பு நலனையே உணர்த்து.

20. South Indian Inscriptions, Vol VII, no. 129; Vol VIII, no. 291.

திருக்குறள் முதலான பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் வேளாண்மை சிறப்பிக்கப்படுவதைக் கண்டோம். "வேளாண்மை செய்து விருந்தோம்பல்" எனப் பழமொழி நானூறும் (பா 175), "பொய் வேளாண்மை புலைமையின் துவ்வாது" என முதுமொழிக் காஞ்சியும் (துவ்வாப்பத்து), "பொருளிலான் வேளாண்மை காமுறுதல் இன்னா" என இன்னா நாற்பதும் (பா. 36) கூறுகின்றன. நட்பில்லாதவர்களுடைய இல்லத்திற்குச் சென்று அவர்கள் உபசரித்து வழங்குகின்ற கறிச் சோற்றினை உண்பது இனியதன்று என்று பொருள்படும் வகையில், "நாள்வாய்ப் பெறினும் நள்ளாதார் இல்லத்து வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்" என நாலடியார் (பா. 207) கூறுகிறது. இனியவை நாற்பது (பா. 3) வேளாண்மை என்பது உழவர்களிடம் இருப்பது சிறப்பு என்ற பொருளில் "ஏருடையான் வேளாண்மை தானினிது" எனக் கூறுகிறது. இவ்வாறெல்லாம் இருப்பினும், சமண முனிவர்களால் இயற்றப்பட்ட நாலடியார் மட்டுமே வேளாண் வேதம் எனக் குறிப்பிடப்படுகிறது. இது குறித்து இரு பாடல்கள் உள்ளன:

*ஆலின் அரசின் அசோகின் அணியிருளின்*
*மேலை மறையின் விரிந்த பொருள் - நாலடியாம்*
*வெள்ளாஅன் வேதத்தின் இன்னுரையைக் கண்டக்காற்*
*கொள்ளாரோ நல்லார் குறித்து*

*வெள்ளாண் மரபுக்கு வேதமெனச் சான்றோர்கள்*
*எல்லாருங் கூடி எடுத்துரைத்த - சொல்லாய்ந்த*
*நாலடி நானூறும் நன்கினிதா என்மனத்தே*
*சீலமுடன் நிற்க தெளிந்து*[1]

இதற்கு என்ன காரணம் என ஆராய்வோம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் எனக் குறிப்பிடப்படும் இலக்கியங்கள், கி.பி. 4ஆம் நூற்றாண்டு தொடங்கிக் கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையிலான கால கட்டத்தில் எழுதப்பட்டவை. சங்க இலக்கியத் தொகுதிகளின் மொத்த

எண்ணிக்கையை (பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும்) அடிப்படையாகக்கொண்டு இப்பதினெட்டு இலக்கியங்களும் - எண்ணிக்கையை நிறைவு செய்வதற்காகச் சில, புதியனவாக எழுதிச் சேர்க்கப்பட்டும் - கி.பி. 10ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டிருக்கலாம்.

தமிழ் எழுத்து வரிசையை நெடுங்கணக்கு எனக் குறிப்பிடுவதுபோல, எண்களின் கூட்டல், கழித்தல் முதலியவற்றின்மூலம் கிடைக்கின்ற இறுதி விடையைக் கீழ்க்கணக்கு எனக் குறிப்பிடுவதுண்டு. மனித வாழ்வின் பாவ புண்ணியங்களை ஈசன் கணக்கிடுகிறான் என்ற பொருளில் "எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே" என அப்பர் பெருமான் (ஐந்தாம் திருமுறை, இன்னம்பர்ப்பதிகம், பா. 8) குறிப்பிடுகிறார். அந்த வகையில் வாழ்க்கைக்குரிய நீதி நெறிகளைக் கூறும் நூல்கள் என்ற பொருளில் கீழ்க்கணக்கு நூல்கள் என இவை குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும்.

இருப்பினும் இப்பதினெட்டு நூல்களுள் பதினொரு நூல்கள் மட்டுமே நீதி நூல்கள் ஆகும். கார் நாற்பது, களவழி நாற்பது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, கைந்நிலை ஆகியவை சங்க இலக்கியங்களை முன்மாதிரியாகக்கொண்டு அகத்திணை, புறத்திணை சார்ந்து எழுதப்பட்டவை ஆகும். பதினொரு நீதி நூல்களுள் நாலடியார், பழமொழி, ஏலாதி, சிறுபஞ்சமூலம் ஆகியன மட்டுமே சமணர்களால் எழுதப்பட்டவை. (திருக்குறளே இந்நீதி நூல்களுள் பழமையானது எனினும் முற்றிலும் சமண சமயச் சார்புடைய நூல் என்று கூறிவிட முடியாது.) நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, முதுமொழிக் காஞ்சி ஆகியவை சைவ, வைணவ மரபுகளையும் வைதிக ஸ்மிருதி மரபையும் சார்ந்தவை.

சமண சமயம் சார்ந்த நீதி நூல்களுள்ளும் பழமொழி, சிறுபஞ்சமூலம், ஏலாதி ஆகியனவற்றில் அரச குலச் சார்பு தென்படுவதையும் போர்க்குடிகள் சிறப்பிக்கப்படுவதையும் நம்மால் உணரமுடியும். பழமொழி நூலிலுள்ள நானூறு பாக்களும் முன்றுறை அரையனார் என்பவரால் இயற்றப்பட்டவை. இவரது பெயரே இவர் அரச குலத்தவராக இருக்க வேண்டுமென உணர்த்துகிறது. இந்நூலில் (பா. 21), "குல விச்சை கல்லாமல் பாகம்படும்" என்ற பழமொழிக்கு எடுத்துக்காட்டாகக் கரிகாலன் நரை முடித்து முறை

செய்த நிகழ்வு குறிப்பிடப்படுகிறது. "முறைமைக்கு மூப்பிளமை இல்" என்ற பழமொழிக்கு எடுத்துக்காட்டாக மனுநீதிச் சோழன் கதை சுட்டிக் காட்டப்படுகிறது. (பா. 93.) சிறுபஞ்சமூலத்தின் ஆசிரியரான காரியாசான்,

*மல் இவர் தோள் மாக்காயன் மாணாக்கன்*
*பஞ்சந்தீர் மழைக்கைக் காரியாசான்*

- என அந்நூலின் சிறப்புப் பாயிரத்தில் புகழப்படுவதைப் பார்க்கையில் அவர் போர்க்குடியினர் என்றும், பெருங் கொடையாளி என்றும் தெரியவருகின்றன. "பணிப்பெண் சமைத்ததை உண்ணக்கூடாது" (தொழீஇ அட உண்ணார் - என்ற கருத்து இந்நூலின் பா. 36இலும், "பத்தினி, சேவகன் (போர்வீரன்), எவ்விதத் தன்னல நோக்கத்திற்காகவும் வழக்குரைக்கத் தவறாத சான்றான் ஆகியோரது சிறப்பு, அவர்கள் இறந்தபின்னர் மக்களால் உணரப்படும்" என்ற கருத்து பா. 101இலும், வீரர்களின் பெருமை பல பாக்களிலும் இந்நூலில் எடுத்துக் கூறப்படுகின்றன.

ஏலாதி, மாக்காயனின் மற்றொரு மாணாக்கரான கணி மேதாவியார் என்பவரால் இயற்றப்பட்டது. அரசன் தவிர்க்க வேண்டியவையாகப் போகம், வீண் செலவு, மிருக வேட்டை, கள், சூது, கடுஞ்சொல் பேசுதல், கடுங்கோபத்துடன் தண்டனை வழங்குதல், அடக்கமின்மை ஆகியவற்றை இந்நூலின் 18ஆம் பாாடல் பட்டியலிடுகிறது. ஈகையின் பயனாக (மறுபிறப்பில்) அரசாட்சி கிட்டும் என்றும் (பா. 47), சுற்றத்தாரைப் பாதுகாப்பவன் வாளேந்தும் அரசனாகப் பிறப்பான் என்றும் (பா. 48), தவசியர்க்கு உணவளிப்பவன் குபேரனாக வாழ்வான் என்றும். (பா. 49), ஊனமுற்றோர்க்கும் ஆதரவற்றோர்க்கும் உணவளிப்போர் பல்யானை மன்னராய் வாழ்வர் என்றும் படைத் தலைவராய் வாழ்வர் என்றும் (பா. 52, 53) இந்நூல் குறிப்பிடுவதிலிருந்து அரச குலத்தாரையும், பெருஞ்செல்வரையும் போற்றும் கணி மேதாவியாரின் மனநிலை வெளிப்படுகிறது.

கி.பி. 7ஆம் நூற்றாண்டில் சைவ சமய பக்தி இயக்கத்தின் எழுச்சியால் பாண்டிய நாட்டில் சமண சமயம் வீழ்ச்சியடைந்தது. ஆனால், கி.பி. 8ஆம் நூற்றாண்டில் மதுரையைச் சுற்றியுள்ள எண் பெருங்குன்றங்களிலும் மீண்டும் சமணம் உயிர்த்தெழுந்தது. அத்தகைய நிலையில்தான் நாலூறு

பாடல்கள் கொண்ட நாலடியார் தோன்றிற்று. எண் பெருங்குன்றத்துச் சமண இருடியர்தாம் இப்பாடல்களை இயற்றினர் எனக் கருதப்படுகிறது. இந்நூலுள் இரு பாடல்களில் (பா. 200, 296) பாண்டியரின் கீழ்ச் சிற்றரசர்களாகப் புதுக்கோட்டை, திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர்ப் பகுதிகளை ஆண்ட பெருமுத்தரையர் குறிப்பிடப்படுகின்றனர். பா. 296இல், செல்வர்களிடம் சென்று பிச்சை ஏற்காமல் தன்மானத்துடனும் சுயமுயற்சியுடனும் வாழ்வோர்க்கு முன்மாதிரியாகப் பெருமுத்தரையர் குறிப்பிடப்படுகின்றனர். சிங்கம்புணரிப் பகுதியிலுள்ள மேலைச் சிவபுரி, மிதிலைப்பட்டியை உள்ளடக்கிய பூங்குன்ற நாட்டுத் தலைவனான பூங்குன்ற நாடன் பெயர் பா. 128, 212 ஆகியவற்றில் முன்னிலை விளித்தொடராகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.[2] நாலடியாரை இயற்றிய சமண முனிவர்கள் இவ்விருவரின் அரசியல் ஆதரவுடன் செயல்பட்டனர் என எண்ணுவதற்கு இடமுண்டு.

எனவே, நாலடியாரை முற்றிலும் வேளாளர்களுக்குச் சார்பான நூல் என்று சொல்ல இயலாது. மட்டுமின்றி, உலகியற்கை என்பது முற்றிலும் கீழ்மேலாய் மாறிவிடக் கூடியது என்ற கருத்து,

*உடைப் பெருஞ் செல்வரும் சான்றோரும் கெட்டுப்*
*புடைப் பெண்டிர் மக்களும் கீழும் பெருத்துக்*
*கடைக்கால் தலைக் கண்னதாகிக் குடைக் கால்போர்*
*கீழ் மேலாய் நிற்கும் உலகு*

- என உவமித்துக் கூறப்படுகிறது. புடைப் பெண்டிர் மக்கள் என்பது வைப்பாட்டியரின் பிள்ளைகள் எனப் பொருள் கூறப்படுகிறது. ஒருவன் முதுமை அடைந்துவிட்டால் வீட்டிலிருக்கும் பணிப்பெண்கூட “வெளியில் நில்; போ” என்று கட்டளையிடும் நிலை வந்துவிடும் என்ற கருத்து,

*மூப்பு மேல் வாராமை முன்னே அற வினை*
*ஊக்கி அதன்கண் முயலாதான் - தூக்கிப்*
*புறத்திரு போகென்னும் இன்னாச் சொல் இல்லுள்*
*தொழுத்தையாற் கூறப்படும்*

- என்ற பாடல் (326) வடிவிற் கூறப்படுகிறது. இப்பாடலில் இடம்பெற்றுள்ள தொழுத்தை என்ற சொல்லுக்கு, 'வெள்ளாட்டி' என்றே பொருள் கூறப்படுகிறது.[3]

இவ்வாறெல்லாம் இருந்தாலும், நாலடியாரை 'வேளாண் வேதம்' என்று குறிப்பிடுவதன் காரணம் என்ன?

## புலால் மறுப்பும் சாதி உயர்வும்

புலால் மறுப்பு என்பது சமண சமயத்துக்கே உரிய அறமாகும். வைதிக பிராம்மணர்கள் உட்பட அனைத்து வர்ணத்தவரும் புலால் உண்ணும் வழக்கம் உடையோராகவே இருந்தனர் என்பதற்கும், சமண சமயத்தின் தாக்கத்தால்தான் ஊனுண்ணாமையைக் கடைப்பிடிக்கத் தொடங்கினர் என்பதற்கும் வரலாற்றில் பல சான்றுகள் உண்டு. பௌத்தமும் ஆசீவகமும் புலால் மறுப்பைக் கடுமையாகக் கடைப்பிடிக்க வலியுறுத்தவில்லை. அதனால்தான் பௌத்தம் - குறிப்பாக சௌத்ராந்திக பௌத்தம் - மீனவர்கள் போன்ற கடலோடிச் சாதியினரிடையே செல்வாக்குடன் நீடித்து நிற்க இயன்றது.[4] ஆனால் சமணம், அனைத்து உயிர்களும் இப்பிரபஞ்சத்தில் வாழ்வதற்கு உரிமையுடையனவே என்பதால் புலால் மறுப்பையும் கொல்லாமையையும் அடிப்படையான வாழ்வியல் அறமாக வலியுறுத்திற்று. சிலப்பதிகாரம் (10:11-18) பௌத்த விகாரையைக் குறிப்பிடும்போது,

*பணையைந் தோங்கிய பாசிலைப் போதி*
*அணி திகழ் நீழல் அறவோன் திருமொழி*
*அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்*
*இந்திர விகாரம்*

- என்றும், சமண அருகத்தானத்தைக் குறிப்பிடும்போது,

*புலவூண் துறந்த பொய்யா விரதத்து*
*அவல நீத்தறிந்தடங்கிய கொள்கை*
*மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய*
*ஐவகை நின்ற அருகத்தானம்*

- என்றும் கூறுகிறது. போதிதருமம் என்பது புத்த சமயத்துக்கு அடிப்படையென்பதும், கொல்லாமை என்பது சமண சமயத்துக்கு அடிப்படையென்பதும் தெளிவாகின்றன. திருக்குறளில் சமண சமயக் கோட்பாடு இடம்பெற்றுள்ளது என்பதற்கு வலிமையான சான்றாகக் கொல்லாமை அதிகாரத்தில் இடம்பெற்றுள்ள, பின்வரும் குறட்பாவினைச் சுட்டுவதுண்டு.

*பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்*
*தொகுத்தவற்றுளெல்லாம் தலை*

இவ்வுலகம் பலவகைப்பட்ட உயிரினங்களின் வாழ்விடமாதலால் அவ்வவற்றின் வாழ்விடத்தையோ வாழ்க்கை முறையையோ பாதிக்காத வகையில் உணவு உற்பத்தி செய்து அவ்வுணவையும் பிற உயிர்களுடன் பகுத்துண்டு வாழ்வதே மிகவுயர்ந்த அறம் என வள்ளுவர் அறிவிக்கிறார்.

சமண சமயத்தின் இக்கோட்பாடு, வருணாசிரம அமைப்பின்மீதும் தனது தாக்கத்தைச் செலுத்திற்று. வைசிய வருணத்தில் சேர்க்கப்பட்டிருந்த பரதவர்களும், அசுர குலச் சத்திரியரான மாவலி வாணர் வம்சத்து மறக்குல அகம்படியர் முதலானோரும் வைதிக சமயத்திலும் பௌத்த சமயத்திலும் தமது வருண அந்தஸ்தினைத் தக்க வைத்துக்கொள்ள இயன்றது. ஆனால் சமணம் பரதவர், மறவர் போன்ற வேட்டைச் சாதியினரை இழிகுலத்தோராகக் கருதிற்று. சமணக் காப்பியமான சீவக சிந்தாமணி (பா. 2751) பின்வருமாறு அறிவிக்கிறது:

*வில்லின் மா கொன்று வெண்ணிணத் தடிவிளம்படுத்த*
*பல்லினார்களும்படுகடற் பரதவர் முதலா*
*எல்லை நீங்கிய இழி தொழில் இழி குலம் ஒருவி*
*நல்ல தொல்குலம் பெறுதலும் நரபதி அரிதே*

இத்தகையோர், மறுபிறப்பிலும் உயர் குலத்தில் பிறக்கமாட்டார்கள் என இப்பாடல் உறுதிப்படுத்துகிறது.[5]

இப்பின்னணியில் பார்க்கும்போது, சங்க கால ஆகோள் - வெட்சிப்போர் - மரபினர், சமண சமய நிறுவனத்தால் புலைத் தொழிலராகக் கருதப்பட்டதிலும், அதற்கு மாறுபட்ட, மாடுகளை வீட்டு விலங்குகளாகப் பராமரித்து உழவில் ஈடுபடுத்திய வேளாளர் - சூத்திர வர்ணத்தவராயினும் - உயர்வாகக் கருதப்பட்டதிலும் வியப்பில்லை.

இந்த இடத்தில், நாலடியாரில் இடம்பெற்றுள்ள ஒரு குறிப்பு மிகுந்த முதன்மை பெறுகிறது. எந்தப் பெருமுத்தரையர் நாலடியாரின் போற்றுதலைப் பெற்றாரோ, அதே பெருமுத்தரையரால் மனமுவந்து அளிக்கப்பட்டு அவர்களின் ஈகைக் குணத்துக்கும் விருந்தோம்பல் பண்புக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்த புலால் சோறு ஒரு பாடலில் (பா. 200) பழிக்கப்படுகிறது.

*பெருமுத்தரையர் பெரிதுவந்தீயும்*
*கருனைச் சோறார்வர் கயவர் - கருனையைப்*
*பேரும் அறியார் நனிவிரும்பு தாளாண்மை*
*நீரும் அமிர்தாய் விடும்*

சொந்த முயற்சியால் கிட்டுகிற பருக்கை (புற்கை) நீரை அருந்துபவர்கள் அமிழ்தத்தை நுகர்கிற தேவர்களுக்குச் சமமானவர்கள் என்றும், பெருமுத்தரையர் மனமுவந்து அளித்தாலும்கூட அவர்களால் அளிக்கப்படுகிற கருனைச் சோற்றை உண்பவர்கள் கயவர்களே என்றும் இப்பாடல் கூறுகிறது.[6]

எவ்வுயிர்களையும் துன்புறுத்தக்கூடாது என்பதே 'அஹிம்சை' எனப்படும். அஹிம்சையே சமணத்தின் அடிப்படைக் கோட்பாடு. கர்மவினை பற்றி வலியுறுத்துகிற நாலடியார் பாடல் ஒன்று (பா. 122),

*இரும்பார்க்கும் காலராய் ஏதிலர்க் காளாய்க்*
*கரும்பார் கழனியுள் சேர்வர் - சுரும்பார்க்கும்*
*காட்டுளாய் வாழும் சிவலும் குறும்பூழும்*
*கூட்டுளாய்க் கொண்டு வைப்பார்*

- என அறிவிக்கிறது. வண்டுகள் ரீங்கரிக்கும் காட்டில் பறந்து திரியும் காடை, கௌதாரி போன்ற பறவைகளைப் பிடித்துக் கூட்டில் அடைத்து வைப்பவர்கள், மறுபிறவியில் பிறரின் அடிமைகளாய்க் காலில் விலங்கிடப்பட்டுக் கரும்புக் கொல்லையில் இருக்க நேரிடும் என்பது இப்பாடலின் பொருள்.[7] இப்பாடல், ஜைன சமயத்தின் அடிப்படைக் கோட்பாட்டை வலியுறுத்துகிற அதே வேளையில், நிலப்பிரபுத்துவ[8] சமூகத்தில் உருவாகி வந்த பண்ணையடிமை முறையை - கர்மவினையைக் காரணமாகக் காட்டி - நியாயப்படுத்துகிறது என்பதையும் நாம் உணரலாம்.

பௌத்தம் கர்மவினையை ஏற்றுக்கொண்டாலும், இழிசினராகக் கருதப்பட்ட புலைச் சாதியினரைக்கூட பிக்ஷுக்களாக அனுமதித்துச் சங்கத்தில் சேர்த்துக்கொண்டது.[9] அந்த வகையில் உருவான தவசி (தபஸ்வின்) வர்க்கம், வர்ணாசிரம வரிசையில் பிராம்மணர்களின் இடத்தை எட்டிப் பிடித்தது. சடங்காசார நெறிமுறைகளை வகுத்து நடை முறைப்படுத்தும் அதிகாரம் பௌத்த சங்கத்தின் கையில் இருந்தது. பௌத்த சமயத்தைப் பின்பற்றிய குடும்பங்களில் நடைபெறும் திருமணம் முதலிய நிகழ்வுகளில் வைதிக பிராம்மணர்களின் பங்கேற்பு இருந்ததில்லை. ஆனால், சமண சமயத்தின் சிராவக நோன்பைப் பின்பற்றிய உதயணன் - வாசவதத்தை திருமணம் 'பார்ப்பன முதுமகன்' ஒருவனால்தான் நடத்திவைக்கப்பட்டது என்பதையும் கோவலன் - கண்ணகி திருமணம் "மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட" நடைபெற்றது என்பதையும் முறையே பெருங்கதை (2:3:30-37) மற்றும் சிலப்பதிகாரம் (1:51-53) ஆகியவற்றால் அறியலாம்.

பௌத்தத்தின் நிலைப்பாடு வைதிக பிராம்மணர்களின் நலன்களுக்கு எந்த அளவு எதிரானதாக அமைந்ததோ அதே அளவுக்கு வளர்சியுற்றுக் கொண்டிருந்த நிலப்பிரபுத்துவத்தின் நலன்களுக்கும் எதிராக அமைந்தது. பௌத்தம் அரசியல் ரீதியான எதிர்ப்புகளால் வீழ்ச்சியைச் சந்திக்க நேர்ந்தபின்னர் மீண்டெழ இயலாமல் போனது இதனால்தான் எனத் தோன்றுகிறது.

சமணம் ஒரு முறை வீழ்ந்தபின்னர் மீண்டும் உயிர்த்தெழ முடிந்ததற்கு, அது

மேற்கொண்ட நிலப்பிரபுத்துவ ஆதரவு நிலைப்பாடும் ஒரு காரணமாக இருக்கலாம். கி.பி. 10ஆம் நூற்றாண்டில் கர்நாடக மாநிலத்தில் எழுதப்பட்ட 'சாவுண்டராய சரித்திரம்' என்ற சமண சமய நூல், விஸ்வகர்மாக்கள் போன்ற கைவினைஞர்கள் ஜைனத் துறவியாவதற்கு அனுமதிக்கப்பட மாட்டார்கள் என வரையறை செய்துள்ளதென வரலாற்றறிஞர்கள் எழுதியுள்ளனர்.[10] சமண சமயத்தின் தோற்றுவாய்க் கட்டத்தில் வேளாப் பார்ப்பனரான கண்மாளர் சமூகத்தவர் சமணப் பள்ளிகள் அமைத்தல், நிர்வகித்தல் போன்ற முன்னோடியான பணிகளைப்புரிந்த ஆசாரியர்களாக இருந்துள்ளனர். அவ்வாறிருக்க, இடைக்காலத்தில் இத்தகைய ஒரு நிலை உருவாகக் காரணம், நிலப்பிரபுத்துவம் சார்ந்த அடிப்படைப் பண்ணையடிமை வர்க்கமும், தச்சர் - கொல்லர் முதலிய கைவினைஞர் வர்க்கமும் சுதந்திரமாகச் செயல்பட அனுமதிக்கப்பட்டால் அவர்களின் பணிக்கு கிராக்கி (பணியருமை) கூடிவிடும் என்பதாகத்தானே இருக்க முடியும்?

நாலடியார் இயற்றப்பட்ட காலகட்டத்தில் தமிழக வேளாளர்கள் நிலப்பிரபுக்களாக உருவாகிவிட்டார்கள் என்று கூறிவிட முடியாது. ஆனால், நிலப்பிரபுத்துவ அடுக்கில் கீழ்மட்டப் பண்ணையடிமைகளுக்கு மேலாக அரசுக்கு இறை செலுத்துகின்ற வாரக் குடிகளாக வேளாளர்களே இருந்தார்கள் என உறுதியாகக் கூறலாம். இத்தகைய ஒரு நிலையில் சூத்திர வர்ண அந்தஸ்தை ஏற்றுக்கொண்டாலும், புலால் உண்ணாமை என்ற விரதத்தைக் கடைப்பிடிப்பதற்கு இயன்றது என்பதால் வேளாளர்களின் சாதி அந்தஸ்து - சமண சமய நிறுவனத்தில் - உயர்வாகக் கருதப்பட்டிருப்பின் அது நியாயமானதே.

வேளாளர் சாதிக் குழுக்களுள் உயர் பிரிவுகளாகக் கருதப்படும் தொண்டை மண்டல வேளாளர், கார்காத்த வேளாளர், தென்பாண்டி நாட்டு வேளாளர் முதலிய பிரிவுகளைச் சேர்ந்தோர் சைவ வேளாளர்கள் என்றும் அவர்களது ஊன் கலப்பற்ற உணவு சைவ உணவு என்றும் குறிப்பிடப்படுவது கவனத்துக்குரியது.[11] இவர்களுள் குறிப்பிடத்தக்க விழுக்காட்டு எண்ணிக்கையினர் முற்காலத்தில் சமண சமயத்தைப் பின்பற்றியவர்கள் என்பதில் ஐயமில்லை. வேளாளர்களின் சமூகத் தலைமை அங்கீகரிக்கப்பட்டிருந்த இலங்கை - யாழ்ப்பாணத் - தமிழரிடையே ஊன்

கலப்பற்ற காய்கறி உணவு 'ஆரத உணவு' (அர்ஹத் = சமணர்) என்றே வழங்கப்பட்டு வந்தது என்ற உண்மை, அறிஞர்களால் பதிவு செய்யப்பட்டுள்ளது.

திருக்குறள் உட்படச் சமண சமயச் சார்புடைய நீதிநூல்களில் உழவு சிறப்பிக்கப்படுகிறது. வேளாண்மை என்ற சொல் விவசாயம் என்ற பொருளைப் பெறுவதற்கும், வேளாளர் என்ற சொல் பெருமைக்குரியதாகக் கருதப்படுவதற்கும் சமண சமயம் முதன்மையான காரணமாக இருந்திருக்க வேண்டும். சைவ சமய பக்தி இயக்கம் தோன்றியபோது உழு தொழில்புரிந்த வேளாளர் பலர் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு மாறியிருக்க வேண்டும். அப்பர் பெருமானை இதற்கோர் உதாரணமாகக் கொள்ளலாம். சமணமும் பௌத்தமும் தழைத்திருந்த காவிரிப்பூம்பட்டினத்துக்கு அருகிலுள்ள ஆக்கூரில் வள்ளல் தன்மைமிக்க வேளாளர்கள் வாழ்ந்து வந்தனர் என்றும் அவர்கள் சைவ சமயச் சார்பாளர்களாக இருந்தனர் என்றும் திருஞான சம்பந்தரின் தேவாரப் பாடலால் (இரண்டாம் திருமுறை, ஆக்கூர்த் தான்தோன்றி மாடப் பதிகம், பா. 3) தெரிய வருகின்றன.

கி.பி. 8ஆம் நூற்றாண்டில் சிவனடியார்களான நாயன்மார்களைப் பட்டியலிடுகின்ற சுந்தரமூர்த்தி நாயனாரின் திருத்தொண்டத் தொகை, பிராம்மண (வைதிகப் பிராம்மணரும் சிவாச்சாரியாரும்) நாயன்மார்களின் எண்ணிக்கைக்குச் சற்றொப்பச் சமமான எண்ணிக்கையில் (13 பேர்) வேளாள நாயன்மார்களைப் பட்டியலிட்டுள்ளது. இது குறிப்பிடத்தக்க நிகழ்வுப்போக்கு என்பதில் ஐயமில்லை. இவர்கள் அனைவருமே ஊனுண்ணாமையைப் பின்பற்றியவர்கள்தாம் என்று உறுதிபடக் கூறிவிட இயலாது. ஆனால், உணவு உற்பத்திக்கு உழவையே முதன்மையான ஆதாரத் தொழிலாகக் கொண்டிருந்தனர் என்பதிலும் உழவின்மூலம் கிட்டுகிற தானியங்களையும் காய்கனி கிழங்குகள் முதலானவற்றையுமே தூய்மையான உயரிய உணவாகக் கருதினர் என்பதிலும் ஐயமில்லை. (இவர்களுள் சிலர் கூலிச் சேவகர்களாக - போர்க் காலங்களில் கூலி பெற்றுக்கொண்டு போரிடுவோராக - இருந்தனர் என்பது உண்மையே.)

தமிழகத்தின் முதன்மையான சமயங்களாகச் சைவமும் வைணவமும் எழுச்சியுற்று வேரூன்றிவிட்ட பின்னரும் ஜைன சமயம் சில பகுதிகளில்

உயிர்ப்புடன் இருந்ததெனில் அது வேளாளர் குலக் குழுவினரிடையில்தான். இந்நிலை கி.பி. 12-13ஆம் நூற்றாண்டளவில் உறுதிப்பட்டுவிட்டது எனத் தோன்றுகிறது. சற்றுப் பிற்பட்ட - கி.பி. 1637ஆம் ஆண்டுக்குரிய - ஆவணமாயினும் அரதைப் பெரும்பாழி - அரித்வாரமங்கலம் - செப்பேட்டினை இதற்கு ஆதாரமாகக் கொள்ளலாம். வேளாளர் குலப் பிரிவுகளைப் பட்டியலிடும் இச்செப்பேடு, ஜைன வேளாளர்களைக் குறிப்பிடுகிறது.[12] இன்றளவும் தமிழகத்தில் ஜைன சமயத்தைப் பின்பற்றும் வேளாளர்கள் இருந்து வருகின்றனர். ஆயினும், தொண்டை மண்டல வேளாளர், கார்காத்த வேளாளர் முதலிய உயர் பிரிவுச் சைவ, வைணவ வேளாளர்களுடன் மண உறவு கொள்தல் போன்றவற்றால் இவர்களின் எண்ணிக்கை குறைந்துவிட்டது.[13]

தமிழகத்தில் சமண சமயம் என்பது வேளாளர் சமூகத்தின் ஒரு பிரிவினரால் மட்டுமே முதன்மையாகப் பின்பற்றப்படுவது என்ற நிலைமை தோன்றிவிட்ட காலகட்டத்தில், கி.பி. 13ஆம் நூற்றாண்டளவில் சமண சமய நீதி நூல்களுள் ஓரளவுக்கு வேளாளர் சார்புடைய நீதிநூலான நாலடியாரை வேளாண் வேதம் என உரிமை கொண்டாடுவதற்குச் சமண வேளாளர்கள் தலைப்பட்டிருக்க வேண்டும். திருக்குறள் சமண சமய நூல் என்று சமண சமயத்தவர் உரிமை கொண்டாடுவதுண்டு. ஆனால், திருவள்ளுவர் சைவ அடியார் எனச் சைவ சமயத்தவர் உரிமைகோரும் முயற்சி 13-14ஆம் நூற்றாண்டில் உருவாகிவிட்டது.[14]

எனவேதான் சமண சமய நீதிநூல்கள் எனத் தெளிவாக அடையாளங் காட்டத்தக்க நீதிநூல்களுள் அரச குலத்தவர் - போர்க்குடியினரின் புகழைப் பாடாமல், வேளாளர்களின் இயல்புகளுள் ஒன்றாகச் சமண சமயத்தவரால் எழுதப்பட்ட திவாகர நிகண்டு குறிப்பிடுகிற 'கசிவகத்துண்மை' (இரக்க சுபாவம்) என்ற பண்பினை முதன்மைப்படுத்துகிற நாலடியாரைத் தேர்ந்து 'வேளாண் வேதம்' எனக் குறிப்பிடுகிற வழக்கம் உருவாயிற்று என முடிவு செய்யலாம்.

(தொடரும்)

**அடிக்குறிப்புகள்:**

**1.** பக். 7-8, நாலடியார் மூலமும் பதிப்பிக்கப்படாத பழையவுரையும், ச. கிருஷ்ணமூர்த்தி, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 608001, 2007.

**2.** கி.பி. 1167ஆம் ஆண்டில் நிகழ்ந்த பாண்டியர் உள்நாட்டுப் போரில், குலசேகர பாண்டியனின் அணியில் பூங்குன்ற நாடாழ்வான், கேரளசிங்க முத்தரையன் ஆகியோர் இடம்பெற்றிருந்தனர் எனச் சூளவம்சத்தில் (76:140-141; 240; 277 மற்றும் 77:58, 92) குறிப்பிடப்படுகிறது. இவர்கள் நாலடியாரில் குறிப்பிடப்படும் பூங்குன்ற நாடன், பெருமுத்தரையர் ஆகியோரின் வம்சத்தவராக இருக்கலாம்.

**3.** பக்.396, நாலடியார் மூலமும் பதிப்பிக்கப்படாத பழையவுரையும், ச. கிருஷ்ணமூர்த்தி, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 608001, 2007.

**4.** p. 5, Buddhism as expounded in Manimekalai, S.N. Kandaswamy, Annamalai University, 1978.

**5.** இப்பாடலுக்கு உரையெழுதியுள்ள நச்சினார்க்கினியர், வேட்டைச் சாதியினரைக் 'கரும்புறத்தார்' எனக் குறிப்பிடுகிறார். (பக். 1351, சீவக சிந்தாமணி மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், உ.வே.சா. பதிப்பு, 1969.) கவி காளமேகத்தின் தனிப்பாடல் ஒன்று, ("சொக்கன் மதுரையிலே" எனத் தொடங்கும் பாடல்) "கரும்புறத்தார்க்கெல்லாம் அரசான மாவலிவாணா" என முடிகிறது. இவை பிற்பட்ட காலகட்டத்தைச் சேர்ந்த ஆதாரங்கள்தாம் எனினும், பௌத்தக் காப்பியமான மணிமேகலையில் (19:51-56) மாவலி வம்சத்தவளான சீர்த்தி, சோழ அரச மாதேவியாகக் குறிப்பிடப்படுவதையும், வைணவ இலக்கியமான திவ்யப்பிரபந்தம், பெரியாழ்வார் திருமொழி (1:9:6) மாவலியைக் 'கத்திரியர்' (க்ஷத்திரியர்) எனக் குறிப்பிடுவதையும் இவற்றுடன் நாம் ஒப்பிடலாம்.

**6.** கருனை என்ற சொல் கருநெய் என்பதன் திரிபாகலாம். உதிரமும் நிணமும் கலந்த பொரிக்கறி எனப் பொருள்படும் "கருங்கட் கருனைச் செந்நெல் வெண்சோறு" என நற்றிணை (367:3) குறிப்பிடுகிறது.

**7.** 'கரும்பார் கழனி' என்பதற்குக் 'கடுமையான பாறை நிலம்' எனப் பொருள்

கொள்ளப்படுகிறது. ஆனால், "சிறையில் கரும்பினைக் காத்தோம்பல் இன்னா" (அடிமைகளின்றிக் கரும்புத் தோட்டத்தைக் காக்க இயலாது) என்று இன்னாநாற்பது (பா. 5) குறிப்பிடுகிற கருத்தின்படி, கரும்புக் கொல்லைகள் கவனத்துடன் பாதுகாக்கப்பட்டன எனப் புரிந்துகொள்ள முடிகிறது. "அரும் பெறல் மரபின் கரும்பு" என்பது சங்க இலக்கிய வரி.

**8.** இக்கட்டுரையில் நிலப்பிரபுத்துவம் எனக் குறிப்பிடப்படும் சமூக அமைப்புக்கும், மேலைநாடுகளில் Feudalism எனக் குறிப்பிடப்படும் சமூக அமைப்புக்கும் நுட்பமான வேறுபாடுகள் உள்ளன.

**9.** பக். 199, பண்டைய இந்தியா, அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றிய வரலாறு, டி.டி. கோசாம்பி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1989.

**10.** p. 251, Pursuing death: Philosophy and practice of the voluntary termination of life, S. Settar, Indian Institute of Art History, University of Karnatak, Dharwad, 1990.

**11.** 'சைவாள் உணவு விடுதி' என்பது பிரபல 'பிராமணாள் உணவு விடுதி'க்குச் சமமாகப் பெயர் பெற்றிருந்தது அண்மைக் கால வரலாறு. 'சைவம்' என்பது இங்கு சைவ சமய நிறுவனத்தையோ, தத்துவத்தையோ குறிக்காமல் சைவப் பிள்ளைமார்களின் உணவு முறையையே உணர்த்திற்று.

**12.** *செயின காணியாளர் துளுவ முதலான பெருநாட்டு வேளாளர்*

*காரைக்காட்டு வெள்ளாழர் செயின வெள்ளாழர்*

- அரித்வாரமங்கலம் பாதாளேஸ்வரர் கோயில் செப்பேடு, பக்கம் 2, வரிகள் 2-3; 7-8. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை மேனாள் இயக்குநர் திரு. கு. தாமோதரன் அவர்கள் கண்டறிந்து வாசித்தது. இச்செப்பேட்டு வாசகங்கள் தொல்லியல் துறையால் இதுவரை பதிப்பிக்கப்படவில்லை.

**13.** முதற் குலோத்துங்கனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1070 - 1120) மயிலாடுதுறைக்கு அருகிலுள்ள நீடூரில் வாழ்ந்த சைவ வேளாளர் குலத்தவனான கண்டன் மாதவனின் முன்னோர் ஒருவர், தொண்டை

மண்டலக் குன்ற நாட்டுக் குளத்தூரைச் சேர்ந்தவராவார். அவரே சமண முனிவராகிய அமித சாகரரைக் கொண்டு யாப்பருங்கலக் காரிகை இயற்றியவர். (Epigraphia Indica, Vol. XXVIII, no. 8.) அவரோ, அவருடைய முன்னோர்களோ தொண்டை மண்டல ஜைன வேளாளர்களாக இருந்து அரசியல் சமூக மாற்றங்களுக்கிசைந்தும், மண உறவுகளாலும் சைவ சமயத்துக்கு மாறியிருக்க வேண்டும்.

**14.** சென்னை மயிலாப்பூரிலுள்ள திருவள்ளூர் கோயிலில் கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த, சைவ சமயம் என அடையாளம் காட்டத்தக்க குறியீடுகளுடன்கூடிய திருவள்ளுவர் சிற்பம் தொல்லியல் துறையினரால் கண்டறியப்பட்டுள்ளது. இன்றும் அக்கோயில் அமைந்துள்ள பகுதியில் சைவ சமயத்தைப் பின்பற்றும், வள்ளுவர் குலத்தவர் வாழ்கின்றனர்.

**[5]**

## தொண்டை மண்டலத் தண்டலை உழவர்

வேளாண்மை என்றாலே விவசாயம், என்றும் வேளாளர் என்றால் விவசாயி என்றும் பொருள்படுகின்ற நிலைமை கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் தோன்றிவிட்டது. ஏர்க் கலப்பை, வேளாளர் சாதிக் குழுக்களின் அடையாளச் சின்னமாக ஏற்கப்பட்டு, பொதுப் பிரக்ஞையிலும் பதிந்துவிட்டது. சித்திரமேழிப் பெரியநாடு என்ற வேளாளர் தலைமையிலமைந்த சமூகவியல் - அரசியல் நிறுவனத்தின் எழுச்சி இந்தப் பின்னணியில் நோக்குதற்குரியது. கம்பர் எழுதியதாக நம்பப்படும் 'ஏர் எழுபது' வேளாண்மையை அடித்தளமாகக்கொண்ட வேளாளர் சாதிப் பெருமையைச் சிறப்பிக்கும் இலக்கியமே. அப்படியிருக்க, கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையிலும் காருகவினை எனப்பட்ட நெசவுத் தொழில், வேளாளர் தொழில்களுள் ஒன்றாக நிகண்டுகளில் குறிப்பிடப்படுவதிலிருந்து, விவசாயத் தொழில்புரிவோர் மட்டுமின்றிச் சாலியர், கைக்கோளர் முதலிய சாதியினரும் வேளாளர்களாகவே கருதப்பட்டு வந்தனர் எனத் தெரிகிறது. சங்க இலக்கியங்களில் ஓரிரு இடங்களில் காணப்படுகிற, “ஆதரவற்ற பெண்டிர் தமது சுயமுயற்சியால் நூற்ற நூல்” (*ஆளில் பெண்டிர் தாளில் தந்த நுணங்கு நூண் பனுவல்* – நற்றிணை 335), "பருத்திப் பெண்டின் பனுவல்" (புறம். 125) போன்ற குறிப்புகளாலும், இலங்கை அரசி யக்ஷிகுவேணியே நெசவைக் கற்பித்தவள் எனக் குறிப்பிடும் இலங்கை வரலாற்றுத் தொன்மக் குறிப்பினாலும், நெசவாளர்களும் வேளாட்டியரின் மக்களாகவே கருதப்பட்டதில் உள்ள தர்க்கபூர்வ உண்மைமை உய்த்துணரலாம்.

ஆனால் இந்நிலை, பருத்தி விளைவிப்பு, நூல் நூற்பு, நெசவு ஆகிய அனைத்தும் ஊர் சார்ந்த நுகர்வுக்குரிய, பணி மக்களாகக் கருதப்பட்ட தாய்வழிச் சமூகக் குழுக்களால் மேற்கொள்ளப்பட்டு வந்த நிலையில்தான் சாத்தியம். வணிகத்தின் எழுச்சி காரணமாக, வணிகக் குழுக்களுடன் தம்மைப் பிணைத்துக்கொண்ட நெசவுத் தொழிற்சாதிக் குழுவினர் நெய்யும் நகரத்தார், சாலிய நகரத்தார், கைக்கோள நகரத்தார் போன்ற பெயர்களில் செயல்படத் தொடங்கியதன் விளைவாக வேளாளர் சாதிக் குழுவினருடன் அவர்களை அடையாளப்படுத்துவது நின்றுவிட்டது எனலாம். அதே

வேளையில் நீர்ப்பாசனத் திட்டங்கள் பெருமளவில் செயல்படுத்தப்பட்டு, நன்செய் நிலங்கள் உருவாக்கப்பட்டு விவசாய விரிவாக்கம் நடைமுறைப்படுத்தப்பட்டதன் விளைவாக நிலப்பிரபுத்துவம் இறுக்கமடைந்து சமூக இயக்கமே நிலப்பிரபுத்துவத்தின் கட்டுப்பாட்டுக்குள் கொணரப்பட்டது. இந்நிலை உருவாவதற்கு வேளாளர் சாதிக் குழுக்களின் பங்களிப்பு முதன்மையான காரணம் என்பதில் ஐயமில்லை.

பயிர் செய்பவன் நிலத்தின் விளைச்சலில் குறிப்பிட்ட பங்கு (கீழ்வாரம்) பெறுகிற உரிமை காராண்மை, காராண் கிழமை என்ற தொடர்களால் கி.பி. 450ஆம் ஆண்டைச் சேர்ந்த பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது.[1] அரசு முதலிய அதிகார அமைப்புகள் விளைச்சலில் பெருகிற பங்கு மீயாட்சி, மேலாண்மை என்ற பெயர்களில் அக்கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. கீழ்வாரத்தைக் குறிப்பிடும் காராண்மை என்ற உரிமையின் அடிப்படையிலேயே வேளாளர்களைக் 'காராளர்' என்ற பெயரால் நிகண்டுகள் குறிப்பிடுகின்றன. இது கி.பி. 5ஆம் நூற்றாண்டில் – களப்பிரர் ஆட்சியின் விளைவாகத் - திடுமெனத் தோன்றிய நிலைமையா? அல்லது வேளாளர்தாம் காராளர் (பயிர் விளைவிப்போர்) என்ற சமன்பாடு, ஒரு சங்கிலித் தொடரின் ஒரு கண்ணி என்றால் அதன் தொடக்கக் கண்ணி எது? இதனை வேறுவிதமாகக் கேட்பதென்றால், வேளம் என்ற அமைப்பு விவசாயத்தில் ஈடுபடுத்தப்பட்டதற்கு மறைமுகச் சான்றுகளாகிலும் சங்க இலக்கியங்களில் இருக்கின்றனவா எனக் கேட்கலாம். இக்கேள்விக்கான விடை பெரும்பாணாற்றுப்படையில் உள்ளதெனத் தோன்றுகிறது.

பெரும்பாணாற்றுப்படை, கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்ற புலவரால் கச்சி (காஞ்சி)யைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவனும், திரையர் குலத்தவனும், தொண்டைமான் என்ற பட்டம் உடையவனும், இளந்திரையன் என்று அழைக்கப்பட்டவனுமான சிற்றரசன் ஒருவனின் ஆட்சிச் சிறப்பையும் அவனது நாட்டின் இயல்பையும் விளக்கிப் பாடப்பட்ட ஓர் இலக்கியமாகும். ஒரு வகையில் பெரும்பாணாற்றுப்படை, தொண்டைமான் இளந்திரையனின் களவிளம்பரத்துறை –செய்தி மக்கள் தொடர்புத் துறைத் தலைமையலுவலரின் இலக்கியத் தரம் வாய்ந்த அறிக்கை போன்றது. பாட்டுடைத் தலைவனின் ஆட்சிச் சிறப்பைக் கூறிப் பாணர்களை அவனிடம் ஆற்றுப்படுத்தி, அவனது கொடையைப்

பெறுவதற்கும் அவனது அரசின் வாயிலோர் பதவிகளில் அமர்வதற்கான முயற்சிகள் மேற்கொள்வதற்கும் தூண்டுகிற வகையில் பாடப்பட்டுள்ள இலக்கியமென இதனைக் கருதலாம்.

பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெற்றுள்ள வருணனைகளில் குறிப்பிடத்தக்கது 320-345ஆம் வரிகள் இடம்பெறுகிற, கடற்கரைப் பட்டினங்களில் இருந்த பரதர் (மீனவர்களும் கடலோடி வணிகர்களும்) குடியிருப்புகள் மற்றும் வாழ்விடம் பற்றிய வருணனையாகும். வடநாட்டு மணி வகைகளும் நுகர்வுப் பொருள்களும் குதிரைகளும் கப்பல்கள் மூலமாக இறக்குமதியாகின்ற துறைமுகங்கள்; மாடங்கள் (மாடி வீடுகள்) நிறைந்த வீதிகள்; பரதர் மலிந்த தெருக்கள்; சிலதர் எனப்பட்ட பணி மக்கள் காவல் காக்கும் உயர்ந்த கிடங்குகளும் பண்டக சாலைகளும்; ஊர் முகப்பிலேயே கிடைக்கின்ற பன்றி இறைச்சியும்; விண்ணை முட்டும் மாடங்களில் பெண்டிர் கழங்காடும் காட்சி – இவ்வாறு தொடரும் வருணனைகள் மூலம் திரையன் என்ற குடிப்பெயருக்கு ஏற்ப இளந்திரையன் கடல் வாணிகத்தில் அதிகக் கவனம் செலுத்தினான் என்பதும், வைசிய வருணம் என்பது வணிகர்களையே முதன்மையாகக் கொண்ட வருணப் பிரிவு என்ற தோற்றம் உருவாகத் தொடங்கிவிட்டதென்பதும் தெளிவாகப் புலப்படுகின்றன.

இதனையடுத்து வேள்வி புரிகின்ற அந்தணர்கள் (வைதிக பிராம்மணர்கள்) குடியிருப்பு வருணிக்கப்படுகிறது. அவர்கள் பறவைப் பெயர்ப்படுவத்தம் (இராஜான்னம்) எனப்பட்ட உயர்வகை அரிசிச் சோற்றை உண்டனர் (வரி 305) என்பது போன்ற விவரங்களிலிருந்து, அவர்கள் ஆந்திரப் பகுதியிலிருந்து குடியேற்றப்பட்டவர்களாக இருக்கலாம் என்றும், இராஜான்னம் என்ற நெல் வகையும் – சாலை வழியாகவோ, கடல் வழியாகவோ - ஆந்திரத்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்டிருக்கலாம் என்றும் தோன்றுகின்றன. பின்னாளைய பல்லவர்களின் சாசனங்களை ஆதாரமாகக் கொண்டால் இப்பிராம்மணர்கள் இளந்திரையனாலோ அவனுடைய முன்னோர்களாலோ குடியேற்றப்பட்டவர்கள் என்று கருதிட இயலவில்லை; இருக்குவேள் போன்ற வேளிர்களாலோ சோழர்களாலோ குடியேற்றப்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது.[2]

இவற்றையடுத்து பெரும்பாணாற்றுப்படையில் முதன்மையாகக்

குறிப்பிடப்படுவது, காஞ்சித் திருவெஃகாவிலிருந்த, பாம்பணைப் பள்ளி அமர்ந்த திருமால் கோயிலாகும். (வரி 372-375.) வெஃகா (வேகவதி) ஆற்றின் பூமலி பெருந்துறையில் இளவேனிற் பருவக் காதல் நுகர்ச்சியில் ஈடுபடுவோர் பற்றிக் குறிப்பாகச் சுட்டிச் செல்லும் உருத்திரங் கண்ணனார், 'அருந்திறக் கடவுளை' வாழ்த்திப் பாடுமாறு யாழ்ப் பாணனைக் கேட்டுக்கொள்கிறார். தொண்டைமான் மன்னன் ஒருவன் காஞ்சிப் பகுதியில் வைணவ சமயத்தின் தோற்றுவாய்க் காலத்தில் திருமாலடியானாக இருந்தான் என்பது வைணவ சமய நூல்களிலும் பதிவு பெற்றுள்ளது. இருப்பினும், இத்தகைய வருணனைகளில் இறங்கும் உருத்திரங் கண்ணனார் காஞ்சிக் கடிகை பற்றியோ, பௌத்தப் பள்ளிகள் – விகாரைகள் பற்றியோ, ஜைனப் பள்ளிகள் குறித்தோ ஒருவரிகூடக் குறிப்பிடவில்லை.[3] இது அவரது வைதிகச் சமயச் சார்பினால்தான் என்று தோன்றுகிறது. ஆயினும் இக்காரணத்தைக் கொண்டு அவருடைய பிற வருணனைகளை நாம் புறந்தள்ளிவிட இயலாது. குறிப்பாக, தொண்டை மண்டல உழவர்கள் பற்றிய அவருடைய வருணனைகள் விரிவாக ஆராயத் தக்கவை.

மூன்று வகைப்பட்ட உழவர்கள் பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெறுகின்றனர். முதலாவதாக, வன்புலத் துடவை உழவர்கள். (வரி 191-205.) இடையர்களின் வாழ்விடங்களையடுத்தும், முள்வேலி சூழ்ந்த “எழுகாடோங்கிய தொழுவுடை வரைப்பு” எனப்படும் இருப்பிடத்தையொட்டியும் துடவையுழவர்கள் வாழ்ந்தனர். “தொழுவுடை வரைப்பு” என்பது “இளங்காட்டையுடைய படைத் தலைவர் இருப்பு” என உரையாசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கொள்கிறார்.[4] துடவையுழவர்கள் வாழ்விடம், வரகு வைக்கோல் வேய்ந்த குடியிருப்புகளைக் கொண்ட சிற்றூர்களே.[5] பெரிய எருதுகள் பூட்டப்பட்ட ஏர்க்கலப்பையால் உழப்படும் நிலத்தில் அவரை விதைக்கப்படும். இவர்களின் வீடுகளில் வரகரிசிச் சோறும், அவரைப் பருப்பும் முதன்மையான உணவாகக் கொள்ளப்பட்டன.

இத்துடவை உழவர்களை புறநானூற்றில் (பா.335) குறிப்பிடப்படும் முல்லை நிலக்குடிகளான துடியன், பாணன், பறையன், கடம்பன் ஆகியோருள் உழுகுடிகளாகத் தொடர்கிற பறையர்களுடன் தொடர்புபடுத்திப் பார்ப்பது

பொருத்தமாகும். மேற்குறித்த புறப்பாடலில் வரகு, அவரை, தினை, கொள்ளு ஆகியனவே உணவாகக் குறிப்பிடப்படுகின்றன என்பது கவனத்திற் கொள்ளத்தக்கது. வாகைத் திணை, மூதின் முல்லைத் துறையிலமைந்த மேற்சுட்டிய புறப் பாடலில் பகைவர்களை எதிர்த்து அவர்களின் யானையை வீழ்த்தித் தானும் வீழ்ந்த வீரனின் நடுகல் வழிபடப்படுவதும் ஒரு முதன்மையான வாழ்வியல் கூறாகக் குறிப்பிடப்படுகிறது. “களிறு எறிதல்” என்பதைப் பிற்கால இலக்கண மரபு பரணிப் பாடலாக வகைப்படுத்தினாலும், நடுகல் வழிபாட்டினை, மாடுகளைப் பராமரிக்கும் வாழ்நிலையைச் சேர்ந்தவர்களுக்குரிய கரந்தைத் திணை மரபாகவே தொல்காப்பியம் சித்திரிக்கிறது.[6] நடுகல் மரபின் பல கூறுகள், களிறெறிந்தவனாகவும் (கஜசம்ஹார மூர்த்தி) 'கரந்தை' சூடியவனாகவும்[7] சித்திரிக்கப்படும் சிவ பிரானது முதன்மையான வடிவமாகிய 'கந்து' (உருவமற்ற கல்தூண்) வழிபாட்டு மரபில் கலந்துவிட்டன. நடுகல் வீரன் கோரக்கன அல்லது கோர்க்கா (ஆனிரை காவலன்) வடிவ வைரவ மூர்த்தத்துடன் இணைந்து கயிலைவாசி ஆயினான். மட்டுமின்றி, புதிய கற்கருவிப் பயன்பாட்டுப் பண்பாட்டு நிலையிலேயே காளையை வென்றடக்கித் தொடக்க நிலை விவசாய முயற்சிகளில் காளையை ஈடுபடுத்திய கூற்றுத் தெய்வத்தின் முழுமையான பரிணாம வளர்ச்சியடைந்த வடிவமாகிய சிவ பிரானின் பல பெயர்களுள் 'சம்பு' என்ற பெயர் முதன்மையானது. பறையர் சமூகத்தவர்க்கு வழங்குகிற சாம்பவர் என்ற பெயர் சம்பு மரபினர் என்ற பொருளுடையதே.

இத்துடவை உழவர்களின் உணவில் புலால் இடம் பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. இது சமண சமயத்தின் தாக்கத்தால் நேர்ந்ததா என்ற கேள்வி எழுவது தவிர்க்க இயலாதது. அவ்வாறாயின், வள்ளுவர் சமூக உருவாக்கம் குறித்த ஆய்வுடனும் இக்கேள்வி தொடர்புடையதாகிறது. இது தவிர, படைத் தலைவர் இருப்பினையொட்டி இத்துடவை உழவர்களின் வாழ்விடம் அமைந்திருப்பது (நச்சினார்க்கினியரின் உரையை அப்படியே ஏற்பதாயின்), கி.பி. 12-13ஆம் நூற்றாண்டுகளில் தொண்டை மண்டலத்தின் பல ஊர்களில் நிலை கொண்டிருந்த பரிக்கிரகங்கள் எனப்படும் போரவைகள், குறிப்பாக முறையான படைப்பயிற்சியளித்த வலங்கைப் படைப்பிரிவின் பல்வேறு ஆக்கங்கள் ஆகியவற்றின் வரலாற்றுடன் தொடர்புடைய முன்னிகழ்வு ஆகலாம். பறையர் சமூகத்தவர், வலங்கைப்

படைப் பிரிவுகளுடன் தொடர்புடையோரே என்பதற்குப் பிற்கால ஆதாரங்கள் உள்ளன. முழுமையான தெளிவு ஏற்படாத, நீடிக்கின்ற சிக்கல்களுடன்கூடிய ஆய்வுக் குறிப்புகளாயினும், இத்தகைய குறிப்புகளின் பின்னணியில் பார்க்கும்போது இத்துடவை உழவர்கள் (பறையர் சமூகத்தவர்) வைஸ்ய வர்ண அந்தஸ்துக்குரியோராகக் கருதப்பட்டிருக்க வாய்ப்பிருக்கிறது; சூத்திர வர்ணத்தவராகவோ, புலைச் சாதியினராகவோ கருதப்பட்டிருக்க இயலாது.

பெரும்பாணாற்றுப்படை (வரி. 211-252) வருணிக்கும் இரண்டாம் வகை உழவர்கள், நீர் வளம் மிகுந்த, குளிர்ந்த பண்ணை நில இருக்கைகளைச் (தண்பணை தழீஇய தளரா இருக்கை) சார்ந்தவர்கள். 'செறு' எனக் குறிப்பிடப்படும் சேறு நிரம்பிய வயல்களில் தொளியை விரவி நாற்று நடுவோராக இந்த 'வினைஞர்'கள் குறிப்பிடப்படுகின்றனர். இப்பகுதியிலுள்ள ஊர்கள், பசியறியாத வளமான நிலைத்த இருக்கைகளைக் (தொல்பசியறியாத் துளங்கா இருக்கை) கொண்ட பேரூர்களாகும். இப் பேரூர்களிலுள்ள 'நல்லில்' எனப்படும் பெரிய வீடுகளில் உள்ள குழந்தைகள், தச்சச் சிறுவர்கள் செய்துதந்த சிறு தேர்களை உருட்டி விளையாடிக் களைத்து, செவிலித் தாய்மாரிடம் பாலருந்திவிட்டு அமளியில் துயிலும் இக்குழந்தைகளின் பெற்றோர்பற்றி உருத்திரங் கண்ணனார் குறிப்பிடவில்லையாயினும் அவர்கள் ஊரன், மகிழ்நன் என்ற பெயர்களால் குறிப்பிடப்பட்ட மருத நிலத் தலைமக்களாகவே இருக்க இயலும். மருத நில வினைஞர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காகவே இத்தலைமக்களது குடியிருப்புகள் தளரா இருக்கை, துளங்கா இருக்கை எனக் குறிப்பிடப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. கி.பி. 8-9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் – செப்பேடுகளில் - ஊர், ஊரிருக்கை, மனை ஆகியன ஒரே குடியிருப்புப் பகுதிகளிலிருந்த வெவ்வேறு வகை வசிப்பிடங்களாகப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன.[8] எனவே, இத்தகைய நிலைத்த இருக்கைகளின் உடைமையாளர்கள், நிலைமையாளிகள், கருங்கை வினைஞர்களிலிருந்து வேறுபட்ட வர்க்கத்தவரென்றே கருத வேண்டியிருக்கிறது. காஞ்சிக்கு அருகிலுள்ள ஓரிருக்கை எனத் தற்போது வழங்குகின்ற ஊரிருக்கை, இந்நிலைமையாளர்களின் குடியிருப்புகளுள் ஒன்றெனக் கருதலாம் (வைணவ மரபில் 'ஓரிரவு இருக்கை'யே 'ஓரிருக்கை' எனத் திரிந்ததாக நம்பப்படுகிறது.)

இம்மருத நிலப்பகுதியில் நெல்லரிசிச் சோற்றுடன், வீடுகளில் வளர்க்கப்படும் கோழியின் வாட்டப்பட்ட இறைச்சி கிடைக்கும். இங்கு கரும்பைப் பிழிந்து சாறெடுத்துக் கருப்பங்கட்டி (விசயம்) தயாரிக்கும் ஆலை உண்டு. கரும்பு அறுவடை எந்தப் பருவத்தில் நடைபெற்றது என நேரடியாகக் குறிப்பிடப்படவில்லை. ஆனால், வினைஞர் செந்நெல்லினை அறுவடை செய்து போரடித்துத் தூற்றுவது மேல் திசைக் காற்று (குட காற்று எனப்படும் கோடைக்காற்று) வீசுகிற பருவத்தில் நடைபெறும் எனப் (வரி 239-240) பதிவு செய்யப்பட்டிருப்பதால்[9] இளவேனிற் பருவத்தில்தான் கரும்பு அறுவடையும் நடைபெற்றிருக்கும் எனக் கருதலாம்.

கருங்கை வினைஞரால் செந்நெல் அறுவடை செய்யப்பட்ட பின்னர் மருத மரத்தின்கீழ் தெய்வத்திற்குப் பலிகொடுக்கப் பயன்படுகிற களத்தில் நெற்கதிர்களைக் குவித்து மாடுகளை விட்டுப் போரடித்து பொலிதூற்றிக் குவிக்கப்படும் என்ற செய்தி (வரி. 230-241) தெரியவருகிறது. மருத நில உழவர்களான மள்ளர்கள் சித்திரை மாதத்தில் பூக்கின்ற மருத மரத்துக்கும் அதன் தெய்வமான இந்திரனுக்கும் நடத்திவந்த தொல் பழங்காலப் பூப்பு விழாவின் எச்சமே இவ்வாறு பதிவு பெற்றுள்ளது. இது பெருவிழாவாக நடைபெறவில்லை என்பதாலும் கருங்கை வினைஞர்களால் மட்டுமே இவ்வழிபாடு மேற்கொள்ளப்பட்டது என்பதாலும் இதன் வரலாற்றுப் பாரம்பரியத்தை நாம் புறக்கணித்துவிட முடியாது. 'ஸக்ர' என்ற சம்ஸ்கிருதச் சொல், மருத மரத்தைக் குறிக்கும்.[10] பௌத்த நூல்கள் இந்திரனை ஸக்ரன் (பிராகிருத வழக்கில் ஸக்கன்) அதாவது, மருதன் என்றே குறிப்பிடும்.[11] மருத மரத்தை அர்ஜுன விருட்சம் என்றும் சொல்வதுண்டு. தொண்டை மண்டலத்தை ஒட்டியுள்ள ஆந்திர மாநிலப் பகுதியில் மல்லிகார்ஜுனர், நாகார்ஜுனர் என்ற பெயர்களில் மருத மர வழிபாட்டு எச்சங்கள் நீடித்து வருவது கவனிக்கத்தக்கது. இந்திர வழிபாட்டு மரபுகள் பல, சிவ வழிபாட்டில் கலந்துவிட்ட நிலையில் இத்தகைய எச்சங்களாக நீடிக்கின்றன. அதே வேளையில், காஞ்சிப் பகுதியில் உத்தரமேரூர் வட்டத்தில் அமைந்துள்ள பெருநகர் என்ற ஊரில், கி.பி. 18ஆம் நூற்றாண்டு வரையிலும் தேவேந்திரன் கோயில் இருந்துள்ளது என ஓர் ஆவணக் குறிப்பு தெரிவிக்கிறது.[12] அர்ஜுன வழிபாட்டு எச்சங்களுடன் இது இணைத்து ஆராயப்பட வேண்டும்.[13]

நன்செய்ச் 'செறு வினைஞர்'கள் மள்ளர்களே என பெரும்பாணாற்றுப்படை நேரடியாகக் குறிப்பிடவில்லை. ஆனால், தொண்டைமான் இளந்திரையன், “மள்ளர்களை வென்ற வீரன்” எனப் பொருள்படும் வகையில் “மள்ளர் மள்ளன்” என வருணிக்கப்படுகிறான். (வரி. 455.) கி.பி. 12ஆம் நூற்றாண்டில் சேக்கிழார், “கோடைக்காலத்தில் பாலாற்றின் மணல் திட்டுக்களை மள்ளர்கள் தோண்டி வாய்க்கால்களை உருவாக்கி, வயலுக்கு நீர்ப்பாய்ச்சுவர்” எனக் குறிப்பிடுகிறார்.[14] மேற்குறித்த 'ஊரிருக்கை' பாலாற்றின் கரையில் அமைந்திருப்பது கவனத்திற்குரியது. “தீம்புனல் உலகம்” எனத் தொல்காப்பியம் வகுக்கிற இலக்கணத்துக்குத் தக, இத் “தண்பனை தழீஇய தளரா இருக்கை” அமைந்திருப்பது பொருத்தமானதே.

இந்த இடத்தில் முதன்மையான ஒரு கேள்வி எழுகிறது. எலும்பினாலான வஜ்ராயுதத்தினை அல்லது கொம்பினாலான மழுவாளினை ஆயுதமாகக் கொண்ட மழைக் கடவுளான இந்திரன்,[15] ஆறுகளிலிருந்து வாய்க்கால்கள் வெட்டி ஆற்றுநீர்ப் பாசனத்தின்மூலம் விவசாயம் செய்கிற உலோக காலப் பயன்பாட்டு நிலைக்கு முற்பட்ட ஒரு சமூகத்தின் தலைமைத் தெய்வப் பதவியை வகித்தவன். இந்திரனைத் தமது குல முதல்வனாகக் கருதிய மள்ளர்கள் உலோகப் பண்பாட்டு நிலைக்கு முற்பட்ட பூர்வ குடிகளே என்பதில் ஐயமில்லை. அப்படியாயின், உலோகப் பண்பாட்டு நிலைச் சமூகத்தவரால் – அவர்களே ஊரன், மகிழ்நன் மரபினர் என வைத்துக் கொண்டால் - மள்ளர் சமூகத்தவருடன் நிகழ்த்தப்பட்ட போர்கள், உடன்பாடுகள், உட்கிரகிப்புகள் போன்றவை குறித்த தடயங்கள் – தொன்ம வழக்கிலாகினும்- உள்ளனவா என்ற கேள்வி எழுகிறது. “மழைபிணித்தாண்ட மன்னவன்” பற்றிய கதைகளும்,[16] மேகம் சிறை கொண்ட ஐயனார் பற்றிய தல புராணங்களும்[17] இதற்கு விடையாக அமைகின்றன. நீர்ப்பாசன முயற்சிகளை இத்தகைய தொன்மக் கதைகள் உருவகமாகக் குறிப்பிடுகின்றன எனில், குளங்கள் போன்ற இயற்கையான நீர்நிலைகளில் தண்ணீர் வற்றத் தொடங்கும்போது அவற்றின் படுகைகளில் வளர்கிற குளநெல் அல்லது 'நீர்வாரம்' என்ற காட்டு நெல் வகை[18]யைப் பூர்வகுடி மள்ளர்கள் இளவேனிற் பருவத்தில் அறுவடை செய்து பயன்படுத்திய உலோகப் பண்பாட்டுக் காலகட்டத்திற்கு முற்பட்ட மருத நில நெற்பயிர் விவசாயம் எனலாம். இந்நெற்பயிர், சங்க காலத்திலும் பாண்டிய

நாட்டில் 'பேரில்' அரிவையரால் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு வந்தது என்பது புறநானூற்றிலும் குறிப்பிடப்படுகிறது.[19] இப் 'பேரில்'களுக்கு உரியோர், வைஸ்ய வருண அந்தஸ்துக்குரிய, ஐயனார் வழிபாட்டுக் குழுவினராகலாம். தொண்டை மண்டலத்தின் மருதநிலப் பகுதிகளில், கோடை நீடித்தாலும் நீர் குறையாத குளங்கள் இருந்தன. அக்குளங்களின் கரையைக் காக்கின்ற வலைஞர்கள் இருந்தனர். (பெரும்பாண். 272-274.) இக்குளக்காவல் முறையே பின்னாளைய ஏரி வாரியங்களின் முன்னோடியான நீர்ப்பாசன - நிலவருவாய் நிர்வாக முறையாகும்.

மேற்குறித்த இருவகை நிலங்களிலும் இருந்த உழவர்கள் பற்றிய விவரங்களின் மூலம் அவர்களை முறையே பறையராகவும் மள்ளராகவும் நாம் அடையாளம் காண இயலும். தொண்டை மண்டலத்தில் தற்போதைய நிலையில் மள்ளர் குலத்தவர்கள் இல்லையென்றாலும் ஆந்திர மாநிலத்தில் 'மாலர்' எனப்படும் சமூகத்தவர் உள்ளனர். இந்திர வழிபாட்டு மரபின் எச்சங்கள் மாலர் சமூகத்தவரிடையே உள்ளனவா என்று ஆராய்ந்து மள்ளர் - மாலரிடையே உள்ள உறவினை உறுதிப்படுத்தலாம். சித்திரமேழிப் பெரிய நாட்டாரின் எழுச்சிக்குப் பின்னர் – கி.பி. 13ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் மள்ளர் சமூகத்தவர் தொண்டை மண்டலத்தை ஒட்டியுள்ள ஆந்திர மாநிலப் பகுதிகளுக்கும் கொங்கு நாட்டின் சில பகுதிகளுக்கும் குடியேற்றப்பட்டிருக்கவும் வாய்ப்புகள் உண்டு. இது ஒருபுறமிருக்க, பெரும்பாணாற்றுப்படையில் மேற்குறித்த இருவகை நிலங்களின் தலைமக்கள் குறித்த விவரம் ஏதும் தெரிவிக்கப்படாததன் காரணம், அவர்கள் தொண்டைமான் இளந்திரையனின் குலத்தவராகக் கருதப்படாமல் வருணத்தாலும் குலத்தாலும் வேறுபட்டவர்களாகக் கருதப்பட்டதாலோ என்ற ஐயம் ஏற்படுகிறது.

இனி, பெரும்பாணாற்றுப்படை (வரி. 352-371) வருணிக்கும் மூன்றாவது வகை உழவர்கள், “தண்டலை உழவர்கள்” ஆவர். தண்டலை உழவர் என்பதற்கு, “தோப்புக் குடிகள்” என்று நச்சினார்க்கினியர் விளக்கமளிக்கிறார். அதாவது, தோட்டப்பயிர் விவசாயிகள் என்று பொருள். நெய்தல் நிலப் பட்டினங்களுடன் தொடர்புடைய பாக்கங்கள் இவர்களுடைய ஊர்களாகும். தென்னை மட்டை வேய்ந்த, பூந்தோட்டம் சூழ்ந்த தனிமனைகளில் இவர்கள் வசித்தனர். “மஞ்சள் முன்றில் மணம் நாறும் படப்பைத் தண்டலை” எனக்

குறிப்பிடப்படும் இத்தோட்டங்களில் பலா, வாழை முதலிய கனி தரும் மரங்களும் தென்னை, பனை, கமுகு முதலிய மரங்களும் வளர்க்கப்படும். இவற்றின் விளை பொருள்களும் கிழங்குகளும் இவர்களின் முதன்மையான உணவு ஆகும். இடையறாத விளைச்சலைக் கொண்ட பல மரங்கள் நிற்கும் நீளிடை, விண்முட்டும் மாடங்களைக் கொண்ட நன்னகர்கள், வள்ளிக் கடத்தாடும் குடிகளையுடைய பல நாடுகள் – என இப்பகுதி வருணிக்கப்படுகிறது. 'நாட்டார்' எனப் பின்னாளைய சாசனங்கள் குறிப்பிடுகின்ற வேளாண் மாந்தர்கள் இவர்களே என நாம் ஊகிக்கலாம். பின்வரும் காரணங்கள் பரிசீலனைக்குரியன:

1. கிழங்குகள் கொட்டைகள் போன்றவற்றை விதைத்து மரம் வளர்த்தல் தோட்டப்பயிர் விவசாயத்தின் தொடக்க நிலையாகும். தோட்டப்பயிர் விவசாயம் பெண்டிரால்தான் அறிமுகப்படுத்தப்பட்டது என்பது மானிடவியலர் கருத்தாகும்.[20] காஞ்சி காமாட்சி, மாமரத்தின் கீழ் தவம் செய்ததாகவும் அதனால் மாங்காடு காமாட்சி என அவள் பெயர் பெற்றதாகவும் அம்மாமரத்தின் கீழ் காமாட்சிக்குக் காட்சியளித்த சிவ பிரான் ஏக ஆம்ரர் (ஒற்றை மாமரத்தான்) என பெயர் பெற்றதாகவும் தொன்மக் கதைகள் தெரிவிக்கின்றன. பெரியபுராணம் (மும்மையால் சருக்கம், பா. 163) இதனை "மா அமர்ந்த இருக்கை" எனக் கூறுகிறது. பெரியபுராணம் நிலப்பிரபுத்துவத்தின் வளர்ச்சி நிலையில் எழுதப்பட்ட நூலாதலால் காமாட்சியன்னையை மாங்கொட்டையைப் பதித்து மாந்தோட்டம் வளர்த்துப் பராமரிக்கும் தோட்டப்பயிர் விவசாயத்துடன் தொடர்புபடுத்தாமல், நெல் விதைகளை வேளாளர்கட்கு காமாட்சியன்னை வழங்கிப் பயிர்செய்து அறம் வளர்க்கக் கற்பித்ததாகச் சித்திரிக்கிறது. (மும்மையால் சருக்கம், பா. 180-181.)

2. பக்தி இயக்கம், பௌத்த - சமண மரபுகள் மற்றும் வழிபாட்டு நெறிகளின் மூலக்கூறுகளைச் சுவீகரித்துச் சைவ - வைணவ நெறிகளாக்கிற்று. பெரியபுராணம் முன்னிலைப்படுத்திய "அறம் வளர்த்த அன்னை" என்ற படிமம், பௌத்த சமய மணிமேகலையின் படிமத்தை மூலமாகக் கொண்டதே என்பதை முன்னர் கண்டோம். விவசாயத்தை அறிமுகப்படுத்திய பெண்மணி என்ற படிமம், நாகராஜ தரணேந்திரனின் மனைவியாக சமண சமயம் சித்திரிக்கிற பத்மாவதி யக்ஷியின் படிமத்தை

மூலமாகக் கொண்டதாகும்.[21] சங்க இலக்கியங்களில் “பொலம்புனை நாஞ்சிற் பனைக் கொடியோன்” எனக் குறிப்பிடப்படும் வெள்ளை நாகன் – பலதேவன்தான் ஜைன சமயத்தில் நாகராஜ தரணேந்திரன் எனப்படுகிறான். பத்மாவதி யக்ஷி குறித்த ஜைன சமயத் தொன்மங்கள் வைணவ சமயத்தால் சுவீகரிக்கப்பட்டுத் திருமலை - திருச்சானூர் திருத்தலப் புராணம் போன்ற வைணவத் தொன்மங்களில் நீடிக்கின்றன. பெரியபுராணம் (மும்மையால் உலகாண்ட சருக்கம், பா. 165) காமாட்சியன்னை காஞ்சியில் கடுந்தவம் புரிந்த கதையை விவரிக்கும்போது, பதுமா மாநாகம், தனது பிலத்தினைக் (பாதாள உலகமான நாக லோகத்திற்குச் செல்லும் வாயிலான புற்றினை) காமாட்சியன்னை தனது இருப்பிடமாகக் கொள்ளுமாறு விண்ணப்பித்ததாகக் கூறுகிறது. தொண்டை மண்டலத்திலும் ஆந்திரப் பகுதிகளிலும் சேஷாசலம், அஹோபிலம் போன்ற இடப்பெயர்கள் வழக்கிலிருப்பதும், பிலவாயில் (வாயிலுள்) போன்ற பெயர்கள் கல்வெட்டு வழக்கில் இடம்பெற்றிருப்பதும் நாக குலத் தொடர்பு இப்பகுதி மக்களின் பிரக்ஞையில் நீடித்திருப்பதைப் புலப்படுத்தும். தொண்டைமான் இளந்திரையன் குறித்த தொன்மக் கதைகளிலும் நாக குலப் பெண் மூதாதை இடம்பெறுகிறாள்.

3. சம்ஸ்கிருத மொழியில் தண்டலை என்பதற்குச் சமமான பொருளுடைய ஒரு சொல், 'வேலம்' என்பதாகும்.[22] இச்சொல், யாழ்ப்பாணத் தமிழிலும் வழங்கிற்று.[23] இது 'வேளம்' என்ற சொல்லின் உச்சரிப்புத் திரிபே எனத் தோன்றுகிறது. பாலுணர்வை வெளிப்படுத்துவதிலும் துய்ப்பதிலும் கட்டுப்பாடற்ற பெண்ணைக் குறிப்பதற்கு 'வேலஹல்லா' என்ற சொல் சம்ஸ்கிருத்ததில் பயன்படுத்தப்படுகிறது.[24] சமூகத் தலைமைப் பதவி வகித்த, சுதந்திரமான போக்குடைய பெண்ணைக் குறித்த – கணத்தலைவி என்ற பொருளுடைய- கணிகை என்ற சொல், கால வளர்ச்சியில் விலைமகள் என்ற பொருளைப் பெற்றுவிடுவதைப்போல, பெண் தலைமைச் சமூக அமைப்பில் அறிமுகப்படுத்தப்பட்ட தோட்டம் அமைத்தல் என்பது, வேளம் என்ற நிறுவனம் நடைமுறைக்கு வந்த பின்னர் அதனோடு தொடர்புடைய 'வேலம்' என்ற பெயரைப் பெற்றிருக்கலாம்.

பெரும்பாணாற்றுப்படை என்ற நூல் தலைப்பில் இடம் பெற்றுள்ள பெரும்பாணர்கள், பிற பாணர்களிடமிருந்து வேறுபட்ட, வேளாண்

வாயிலோராக உருவாகத் தொடங்கிவிட்ட பாணர்களாகலாம். சிறுபாணாற்றுப்படையில் வரி 25இல் சீறியாழ்ப்பாண (சிறிய யாழினை இசைக்கும் பாணனே) என்ற விளித்தொடர் இடம் பெற்றுள்ளதைப் போன்று இந்நூலில், 'பேரியாழ்ப்பாண' என்ற தொடர் இடம்பெறவில்லை. எனவே, உழவுக்குரிய நிலம் வழங்கப்பட்டு வேளத்துப் பிள்ளைகளாக்கப்பட்ட பாணர்களே பெரும் பாணர் எனக் குறிப்பிடப்பட்டனர் எனத் தோன்றுகிறது. பொருநராற்றுப்படையில் (வரி. 167-173) இடம்பெறும் குறிப்பும் அதற்கான உரையும் இது தொடர்பாகப் பரிசீலிக்கத்தக்கன:

*- - - - - வீறு பெறு*
*பேரியாழ் முறையுளிக் கழிப்பி நீர்வாய்த்*
*தண்பணை தழீஇய தளரா இருக்கை*
*நன்பல்லூர நாட்டொடு நன்பல்*
*வெரூஉப் பறைநுவலும் பரூஉப் பெருந்தடக்கை*
*வெருவரு செலவின் வெகுளி வேழம்*
*தரவிடைத் தங்கலோ இலனே*

கரிகால் சோழனிடத்துப் பரிசில் பெறுவதற்குச் செல்லும் பாணனுக்குக் கரிகாலன் செய்யும் சிறப்பு முதலில் குறிப்பிடப்படுகிறது. "வீறு பெறு பேரியாழ் முறையுளிக் கழிப்பி" என்ற தொடருக்கு, "ஏனை யாழ்களில் வீறு பெற்ற யாழ்ப்பாணர்க்குக் கொடுக்கும் முறைமைகளைத் தந்துவிட்டு" என்று நச்சினார்க்கினியர் உரை கூறியுள்ளார்.[25] அதாவது, "பேரியாழ் முறை" என்பதற்கு, "பெரும் பாணர்க்குரிய மரியாதை" என்று பொருள் கொண்டுள்ளார். அடுத்து அமைந்துள்ள பாடல் வரிகளுக்கு, "கரிகாலன் காலந்தாழ்த்தாமல் மருத நிலம் அமைந்த நாடும் யானைகளும் வழங்குவான்" என்பது பொருளாகும்.[26] இவ்வாறு விளை நிலங்கள் வழங்குவது என்பது 'காராண்மை' உரிமையையே குறிக்கும் போலும்.

மேலே எடுத்துக்காட்டிய பாடல் வரிகளுக்கு முன்னர், கரிகாலன் பாணர் கூட்டத்தைச் சேர்ந்த பாடினிக்குத் தலையில் பொற்றாமரைப் பூச்சூட்டுதல், முத்துமாலையைப் பாடினி அணியக் கொடுத்தல் ஆகிய நிகழ்வுகள் கூறப்படுகின்றன. (வரி. 159-163). இவ்வாறு பாடினிக்குப் பொற்றாமரைச் சூட்டுதல் என்பது, பூத்தரு புணர்ச்சி எனப்படும் பழமையான களவு மண

மரபின் சடங்கு வடிவமாகும். சங்க கால அரசர்கள் பாடினியருடன் களவு மணம் – சட்டப்படி மனைவி என்ற அந்தஸ்திற்கு உரிமை கோரமுடியாத மணம் – புணர்தல் பதிற்றுப்பத்தில் (வரி. 7-9) பின்வருமாறு பதிவு பெற்றுள்ளது:

*ஆடு நடையண்ணல் நின் பாடுமகள் காணியர்*
*காணிலியரோ நிற்புகழ்ந்த யாக்கை*
*முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை*

"வீரர்களெல்லாம் புகழ்தற்குக் காரணமாகிய உனது நோயற்ற வலிமையான கட்டுடலை உன்னைப் புகழ்ந்துபாடும் பாடினி காண்பாளாக" - என்பது இதன் பொருளாகும்.[27] இது புணர்ச்சி குறித்த சங்கேத மொழியாகும். வேளாண் பெருநெறி எனத் தொல்காப்பியம் (களவியல்) குறிப்பிடும் வழக்கம் இதனோடு ஒப்பிடத்தக்கது.

இவ்வாறு பாணர்கள் வேளத்துப் பிள்ளைகளாக ஆவது என்பது சுதந்திரமான – வைசிய - வருண அந்தஸ்தைக் கைவிட்டுச் சூத்திர அந்தஸ்தை அடைவது என்ற வகையில் இகழ்ச்சிக்குரியதாகக் கருதப்படவில்லை. ஏனெனில் ஓர் ஊரில் நிலைத்த குடிகளாக மாறுவது என்பது ஒருவகையில் உயர் தகுதியடைவதுதானே? மதுரைக் காஞ்சியில் (வரி. 340-42), "வையை யாற்றின் (மருத முன்) துறைகள் தோறும் பூந்தோட்டங்கள் சூழ்ந்த தண்டலைகளில் நிலைத்திருந்த பெரும்பாணர் இருக்கை" (அவிரறல் வையைத் துறைதுறை தோறும் பல்வேறு பூத்திரள் தண்டலை சுற்றி அழுந்துபட்டிருந்த பெரும்பாணிருக்கை) குறிப்பிடப்படுகிறது. இத்தகைய வேளாளர்கள், சூத்திர வர்ணத்தவராக இருந்தாலும் அரசர்களால் விரும்பப்படும் 'வீழ்குடியுழவர்களாக'க் கருதப்பட்டனர் என்பது சிலப்பதிகாரத்தில் (5:42-43) பதிவு பெற்றுள்ளது. 'வீழ்குடியுழவர்' என்பதற்கு "யாவரும் விரும்பும் குடி" என்றும் "வேளாண் சாமந்தர்" என்றும் அடியார்க்குநல்லார் உரை எழுதியுள்ளார்.[28] சாமந்தர் என்பது சிற்றரசர்களைக் குறிக்கும். சிலப்பதிகாரக் காலத்தில் (கி.பி. 5ஆம் நூற்றாண்டு) வேளாளச் சிற்றரசர்கள் உருவாகிவிட்டனர் என்பது ஏற்கத்தக்கதேயாயினும், மறையோர் இருக்கையை அடுத்துக் குறிப்பிடப்படும் வீழ்குடியுழவர் வசிப்பிடம், உயர் வர்ணத்தவரால், குறிப்பாக அரச வர்ணத்தவரால் விரும்பப்படும்

வேளாண்குடி உழவர்களின் வசிப்பிடம் என்று பொருள்படுமேயன்றிச் சிற்றரசர்கள் வசிப்பிடம் என்று பொருள்படாது. மேலும், சோழ நாட்டில் பெரும் பாணர்கள், மருத நிலம் சார்ந்த உழுகுடிகளாக (பரப்பு நீர்க் காவிரிப்பாவைதன் புதல்வர்) மாறிவிட்டனர் என்று, பொருநராற்றுப்படையிலிருந்து மேற்கோள் காட்டப்பட்ட வரிகளிலிருந்து ஊகிக்க முடிகிறதெனில், தொண்டை நாட்டில் தண்டலை உழவர்களாக உருவாயினர் என்றும் ஊகித்துப் புரிந்துகொள்ளலாம். இவ்விரண்டு பிரதேசங்களிலும் வேளாண்குடி உருவாக்கம் என்பது வேளம் என்ற நிறுவனத்தின் மூலமே ஏற்பட்டது என்பதே அடிப்படையான உண்மையாகும்.

பெருங்கதை, கி.பி. 7-8ஆம் நூற்றாண்டுகளில் எழுதப்பட்ட நூலாக இருக்கலாம். அந்நூலில், (3:3:57-65) “அறத்துறை என்னும் வண்டியின் நுகத்தடியைத் தாங்குபவர்கள், அரசன் மகிழ்ந்தாலும் சீற்றங்கொண்டாலும் தவிர்க்கப்பட இயலாதவர்கள்; நன்செய் நிலத்துக்குரிய நிலைத்த தொழிலாகிய உழவினை மேற்கொள்பவர்கள்; ஆய்ந்தறிந்த சொற்களைப் பேசுபவர்கள்; நிறைந்த ஆய்வு நோக்குடையவர்கள்; பெருங்கடியாளர்கள்” என்று வேளாளர்கள் வருணிக்கப்படுகின்றனர். இறுதியாகக் குறிப்பிடப்பட்டுள்ள 'பெருங்கடியாளர்கள்' என்பது, “தலை மக்களின் களவு மணத்துக்குரியவர்கள் என்று பொருள்படும் போலும்.[29] இராஜகிருஹ நகரில் 'போகச்சேரி' எனப்படும் கணிகையர் வாழ்விடத்தையடுத்துப் பெருங்கடியாளர் வாழ்விடமான அருங்கடிச்சேரி (மிகுந்த காவலுடைய அந்தப்புரம்)[30] இருந்ததாகப் பெருங்கதை குறிப்பிடுவதால் இவ்வாறு பொருள்கொள்வதே பொருத்தமாக உள்ளது.

தொண்டை மண்டலத்தில்தான் வேளாண் மாந்தரின் குடியேற்றம் தொடக்கத்தில் உருவாயிற்று என்று கொங்கு நாட்டுப் பழம் பாடல்கள் குறிப்பிடுகின்றன.[31] 24 கோட்டங்களும் 79 நாடுகளும் வேளாளர்களின் 'வேளாண்மை' சார்ந்தே உருவாயின. கோட்டம் என்ற பெரும் பிரிவு, 'கோடு' (குளக்கரை) என்ற சொல்லிலிருந்து தோன்றிய கோட்டகம்[32] என்ற சொல்லின் திரிபாகவோ, தோட்டம் எனப் பொருள்படும் சொல்லாக பிங்கல நிகண்டு குறிப்பிடும் 'கோட்டம்'[33] என்ற சொல்லிலிருந்தோ உருவாகியிருக்க வேண்டும். குறிப்பாக, தோட்டப்பயிர் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டே கோட்டம் என்ற நாட்டுப் பிரிவு தோன்றிற்று எனக் கொள்வது

பொருத்தமாகும். தண்டலை என்ற சொல் (தண்மை+தலை) குளிர்ந்த நீர்ப்பெயல் என்று பொருள்படும்.[34] சோலைகளும், தோட்டங்களும் மேகங்களை ஈர்த்து மழை பொழியவைக்கும் என்ற கருத்து, கண்ணனின் கோவர்த்தன கிரி குறித்த பாகவதக் கதையாலும், மகாமேகவன ஆராமம் குறித்த மகாவம்சக் (11:2-3) குறிப்பாலும் தெரியவருவது போன்றே, காமாட்சியன்னையால் தழுவப்பெற்றுக் குழைந்த ஏகம்பர் குறித்த கதையாலும்[35] குறிப்பால் உணர்த்தப்படுகிறது. அந்த அடிப்படையிலேயே வேளாளர் என்றால் காராளர் என்ற சமன்பாடும், காராளர் என்றால் மேகங்களை ஆள்பவர் என்ற கருத்தும் கதையும் உருவாயின என நாம் முடிவு செய்யலாம். தொண்டை மண்டலக் கோட்டங்களுக்கு 'வேலங்'களும், தண்டலைகளுமே அடிப்படையாக அமைந்திருந்தன என்ற வரலாற்று உரிமையை இக்கதை உணர்த்துகிறது.

(தொடரும்)

**அடிக்குறிப்புகள்:**

1. "பூலாங்குறிச்சிக் கல்வெட்டுகள்" எ. சுப்பராயலு, எம்.ஆர். ராகவ வாரியர், முதற்கல்வெட்டு, வரிகள் 11,14,15,16, ஆவணம், இதழ் 1 – பக்.68, அக்டோபர் 1991, தமிழகத் தொல்லியல் கழகம்.
கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்குரிய ஜடில பராந்தக நெடுஞ்சடையனின் வேள்விக்குடிச் செப்பேட்டில் வரி. 124-125இல் "காராண்மை மீயாட்சி" குறிப்பிடப்படுகிறது. பக்.30, பாண்டியர் செப்பேடுகள் பத்து, தமிழ் வரலாற்றுக் கழகம், மறுபதிப்பு: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 1999.

2. நந்திவர்ம பல்லவ மல்லனின் கி.பி. 8ஆம் நூற்றாண்டுக்குரிய காசாக்குடி செப்பேட்டில் (வரி. 108-109) ஊற்றுக்காட்டுக் கோட்டத்துக் கொடுகொள்ளி என்ற ஊரை "சேட்டி றெங்க சோமயாஜி", (சம்ஸ்கிருதத்தில் "ஜேஷ்டபாத சோமயாஜி" – வரி. 93) என்பவர்க்குத் தானமாக வழங்கிய செய்தி குறிப்பிடப்படுகிறது. இவர் தொண்டை நாட்டைச் சேர்ந்தவரே. இவரது பெயராகிய சேட்டி றெங்க சோமயாஜி என்பது, "சேட்டிருங்கோ சோமயாஜி" என்பதன் திரிபாகவே இருக்க வேண்டும். "தாரணி யானைச்

சேட்டிருங்கோவே” என்பது புறநானூற்று வரி. (201:13.) மூத்த இருங்கோ என்பது இதன் பொருள். இம்மன்னனால் செய்விக்கப்பட்ட சோமயாகத்தில் முதன்மையான பங்கேற்று “சேட்டிருங்கோ சோமயாஜி” என்று பெயர் பெற்ற ஒருவரின் வம்சத்தவரே சேட்டி றெங்க சோமயாஜி போலும். இடைப்பட்ட காலத்தில் நேர்ந்த ஒலித்திரிபால் “சேட்டி றெங்க” என உச்சரிக்கப்பட்டு, “ஜேஷ்ட பாத” (பாது = இறங்கு) என சம்ஸ்கிருதத்தில் தவறாக மொழிபெயர்க்கப்பட்டது எனத் தோன்றுகிறது. (பக். 165-166, பல்லவர் செப்பேடுகள் முப்பது, தமிழ் வரலாற்றுக் கழகம், மறுபதிப்பு: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 1999.)

3. உருத்திரங்கண்ணனார், தமது மற்றோர் இலக்கியமான பட்டினப்பாலையிலும், புகார் நகரிலிருந்த பௌத்த, சமண சமய நிறுவனங்கள் பற்றி ஏதும் குறிப்பிடவில்லை.

4. பக். 239, பத்துப்பாட்டு, மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், உ.வே.சா. பதிப்பு, 1974.

5. “துடவை” புதுக்கோட்டை மாவட்டம் கீரனூரிலுள்ள கி.பி. 8ஆம் நூற்றாண்டுக்குரிய முத்தரையர் கல்வெட்டொன்றில் குறிப்பிடப்படுகிறது. (Inscriptions of Pudukkottai State – No. 237.)

6. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல் நூற்பா. 5.

*நாகுமுலையன்ன நறும்பூங்கரந்தை*
*விரகறியாளர் மரபிற் சூட்ட*
*நிறையிவண் தந்து நடுகல்லாகிய*
*வென்வேல் விடலை*
- என்ற புறநானூற்றுப் பாடல் (261) இதற்கு எடுத்துக்காட்டாகும்.

7. *கரந்தை சூடியும் பாற்கடற் கள்வனும்*
*நிரந்தரம் பகை நீங்கினரோ எனும்*
(கம்பராமாயணம், யுத்த காண்டம், இராவணன் சோகப் படலம், பா. 11.) கரந்தை என்பது திருநீற்றுப் பச்சிலையாகும்.

8. Epigraphia Indica, vol. XVIII, No. 2 - விளக்கத்திற்குப் பார்க்க: பக். 108, தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி, முதல் தொகுதி, பதிப்பு: சாந்தி சாதனா, சென்னை-28, 2002. “ஊரன்” என்பது “ஊரான் நிலைமைக்காரன்” என்ற தொடரின் வடிவில், கி.பி. 18 ஆம் நூற்றாண்டைய குலசேகரப்பட்டினம் (தூத்துக்குடி மாவட்டம்) கல்வெட்டில் இடம் பெறுகிறது. (Annual Report on Epigraphy 271/1941.)

9. அறுவடை முடிந்து நெற்போர் குவிக்கப்பட்டு அவற்றின்மேல் சிலந்தி கூடு கட்டிய பின்னர்தான் மாடுகளை விட்டுப் போரடித்தனர். (வரி. 234-238.) எனவே, சித்திரையில் அறுவடையும் ஆனியில் போரடித்துத் தூற்றுதலும் நிகழ்ந்தன போலும்.

10. p. 514, A Students’ Sanskrit – English Dictionary, V.S. Apte, Motilal Banarsidas Publishers, New Delhi, 1968.

11. மகாவம்சம் 7:2; 21:31. (p.55, 144, Mahavamsa, Wilhelm Geiger, Asian Educational Service, 2003.)

12. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகச் சேகரிப்பிலுள்ள செங்கல்பட்டு மாவட்ட ஓலைச் சுவடிக் கணக்குக் கட்டு – எண். 57, மேற்கோள்: “செங்கற்பட்டு மாவட்ட ஆவணங்கள்” – புலவர். பா. கண்ணையன், 'கல்வெட்டு', இதழ் 66, ஏப்ரல் 2005. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை-8.

13. 'செறு' என்ற சொல், தொண்டை மண்டலத்துக்குரிய, கி.பி. 6ஆம் நூற்றாண்டைய பள்ளன் கோயில் செப்பேட்டில் வரி. 59-60இல் இடம்பெற்றுள்ளது. (பக். 29, பல்லவர் செப்பேடுகள் முப்பது, தமிழ் வரலாற்றுக் கழகம், மறுபதிப்பு: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 1999.) கருங்கை வினைஞர் (வரி. 223), வினைஞர் (வரி. 231), மடியா வினைஞர் (வரி. 254 -255) ஆகிய சொல்லாட்சிகள் பெரும்பாணாற்றுப்படையில் மருத நில உழவர்களைக் குறிப்பதற்கு ஆளப்பட்டுள்ளன. “வலிய கையால் தொழில் செய்வார்”, “தொழில் செய்வார்”, “தொழிலொழிந்திராத தொழில் செய்வார்” என இவற்றுக்கு முறையே பொருள் கூறுவார் நச்சினார்க்கினியர் (பக். 233-235,

பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் – உ.வே.சா பதிப்பு, 1974.)

14. *பிள்ளை தைவரப் பெருகுபால் சொரி முலைத்தாய் போல்*
*மள்ளர் வேனிலின் மணல் திடர் பிசைந்து கை வருட*
*வெள்ள நீரிரு மருங்கு கால்வழி மிதந்தேறிப்*
(பெரிய புராணம், மும்மையால் உலகாண்ட சருக்கம், பா. 132.)

15. "பண்டைத் தமிழகத்தில் இந்திர வழிபாடு" என்ற எனது கட்டுரையில் இது குறித்து விவாதித்துள்ளேன். பார்க்க: 'தமிழினி', இதழ் 6, ஜூன் 2008.

16. சிலப்பதிகாரம் 11:29; இக்கதை, உக்கிரபாண்டியன் மேகங்களைச் சிறை செய்த புராணக் கதையாகத் திருவிளையாடற் புராணத்தில் விவரிக்கப்படுகிறது. சோழ மன்னன் இந்திரனின் அருள்பெற்று, உரிய பருவத்தில் மழை பெய்ய வரம் பெற்றான் என்பது இப்புராணக் கதையின் முற்பகுதி. இம்முற்பகுதிக் கதை, திரிந்த வடிவில் மகாவம்சத்தில் (21: 27-33) இடம்பெறுகிறது.

17. "வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும்" என்ற எனது நூலில் (பக். 207-208) இது குறித்த எனது பொருள் கோடல் தெரிவிக்கப்பட்டுள்ளது (பதிப்பு: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 2004.)

18. ப. 132, மர இனப் பெயர்த் தொகுதி, தொகுதி 1, தொகுப்பு: பெ. மாதையன், எச். சித்திர புத்திரன், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1986. (சீவக சிந்தாமணி 355ஆம் பாடலுக்கான குறிப்புரையில் உ.வே.சா. இந்நெல்வகை பற்றிய விவரத்தைத் தெரிவித்துள்ளார்.)

19. ..... *ஆய்மகள்*
*தயிர்கொடு வந்த தசும்பு நிறைய*
*ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்*
*குளக்கீழ் நிறை விளைந்த களக் கொள்வெண்ணெல்*
*முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்*
... *பொருப்பன் நன்னாடு* (புறம் 33)

20. “இந்தியப் பண்பாட்டு உருவாக்கத்தில் பசுவின் புனிதம்” என்ற தலைப்பிலமைந்த பக்தவச்சல பாரதி அவர்களின் கட்டுரை – “பசுக்கள் பன்றிகள் போர்கள் சூனியக்காரிகள் ஆகிய கலாச்சாரப் புதிர்கள்” – பாகம்-2, மர்வின் ஹாரிஸ், தமிழில்: துகாராம் கோபால்ராவ் – நூலின் பின்னிணைப்பு. பதிப்பு: எனி இந்தியன் பதிப்பகம், சென்னை-17, 2006.

21. சமண சமயத்தில் நாகராஜன், பார்சுவநாதர்க்குச் சாமரம் வீசும் பணியாளாகச் சித்திரிக்கப்படுவதால் தனது ஆயுதமான ஏர்க் கலப்பையுடன் காட்சியளிப்பதில்லை. ஆனால், தரணேந்திரன் என்ற பெயரில் தரணி (பூமி) இடம்பெறுவது விவசாயம் தொடர்பான குறியீடு என்பதோடு, அவன் பூமியைத் தாங்கும் ஆதிசேஷன் அம்சத்தை உடையவன் என்பதையும் உணர்த்தும்.

22. p. 533, A Students’ Sanskrit – English Dictionary, V.S. Apte, Motilal Banarsidas Publishers, 1968.

23. p. 3838, Tamil Lexicon, Madras University, 1982.

24. p. 533 A students’ Sanskrit – English Dictionary, V.S.Apte, Motilal Banarsidas Publishers, 1968.

25. பக். 120, பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்.

26. சிறுபாணாற்றுப்படையில் இத்தகைய நிலக்கொடை குறிப்பிடப்படவில்லை.

27. பார்க்க: உ.வே.சா. குறிப்புரை, பக். 112, பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், உ.வே.சா. பதிப்பு, 1989. கார்த்திகேசு சிவத்தம்பி அவர்கள், “பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம்” என்ற தமது நூலில் இதை அழுத்தமாகக் குறிப்பிட்டுள்ளார்.

28. பக். 156, சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும், அடியார்க்குநல்லார் உரையும், உ.வே.சா. நூலகப் பதிப்பு, 2008.

29. “புதுமணம் வதுவை புதுநலம் கடியே”, அபிதான மணிமாலை 2072, பக். 238, அபிதான மணிமாலை – திருவம்பலத்திள்ளமுதம் பிள்ளை இயற்றியது. பதிப்பு: சு. பாலசாரநாதன், உ.வே.சா. நூலகப் பதிப்பு, சென்னை-90, 1988. தொல்காப்பியம் களவியலில் (பொருளதிகாரம் 93ஆம் நூற்பா) “மிக்கோனாயினும் கடிவரையின்றே” எனக் கூறப்பட்டுள்ளது. தலைவன், தலைவியைவிட குடி முதலியவற்றால் உயர்ந்தோனாக இருந்தாலும் களவு மணம் விலக்கப்படாது என்பது பொருள்.

30. பாண்டிய மன்னனின் அந்தப்புரம், ”பீடுகெழு சிறப்பின் பெருந்தகையல்லது ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பு” என நெடுநல்வாடையில் (வரி. 106-107) குறிப்பிடப்படுவது ஒப்பிடத்தக்கது.

31. புலவர் செ.இராசு, கொடுமணலில் சேகரித்த ஓலைச்சுவடி. (மூலனூர் தொண்டைமானுக்குப் பட்டம் கட்டினது.)

32. சீவக சிந்தாமணி, பா. 41, கோட்டகம் என்பதற்குப் பயிருடைத்தான நீர்நிலை என்றே நச்சினார்க்கினியர் பொருள் கூறுவார். (பக். 28, சீவக சிந்தாமணி மூலமும் நச்சினார்க்கினியருரையும், உ.வே.சா. நூலகப் பதிப்பு, 1969.) 'குளக்கோடு' பெரும்பாணாற்றுப்படையில் (வரி. 273) குறிப்பிடப்படுவது இதனுடன் இணைத்து சிந்திக்கத்தக்கது.

33. p. 1173, Tamil Lexicon, Madras University, 1982.

34. “வானம் தண்துளி தலைஇ ஆனாது கல்பொருதிரங்கும் மல்லற் பேர்யாறு” - புறம் 192:7-8.

35. பெரிய புராணம் – மும்மையால் உலகாண்ட சருக்கம், பா. 172-173. (காமாட்சியன்னை புரிந்த பூசனையின் விளைவாகப் பெருமழை பெய்து கம்பையாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்த நிகழ்வு.)

## மேகம் சிறைவிடுத்து, மூவரைச் சிறைப்பிடித்து

கி.பி. 8ஆம் நூற்றாண்டுக்குரிய நிகண்டு நூலான சேந்தன் திவாகரத்தில் (மக்கள் பெயர்த் தொகுதி, நூற்பா-33) "ஏரின் வாழ்நர்" என்பது வேளாளர்களுக்குரிய பெயராகக் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் "ஏரின் வாழ்நர்" பல பாடல்களில் இடம்பெற்றுள்ளனர். முறையான பயிற்சி பெற்ற படை வீரர்கள் "வாளின் வாழ்நர்" எனச் சில பாடல்களில் (புறம். 24:28-29; 377:28) குறிப்பிடப்படுகின்றனர். வாளின் வாழ்நரைச் சத்ரிய வர்ணத்தவராக அல்லது சத்ரிய வர்ண உட்பிரிவினராக ஏற்கலாமெனில், ஏரின் வாழ்நரை வேளாள வர்ணத்தவராக ஏன் ஏற்கக்கூடாது என்ற கேள்வி எழுவது இயல்பு. பொருளீட்டல் என்பதே உணவுத் தேவையை அடிப்படையாகக் கொண்டது. ஆதலால் பயிர் விளைவித்துக் குடிகளின் உணவுத் தேவையை நிறைவு செய்வதே முதன்மையான - அடிப்படையான - தொழிலாகச் சங்க காலத்தில் கருதப்பட்டது என்பதற்கு பல சான்றுகள் உள்ளன. எவ்வகைத் தொழிலையும் ஏருழவுடன் ஒப்பிட்டு உருவகப்படுத்திக் கூறும் மரபு உண்டு. வழிப்பறி செய்து வாழ்க்கை நடத்துவோரை "கள்வேர் வாழ்க்கைக் கொடியோர்", அதாவது, களவினையே ஏருழவாகக் கொண்டு வாழ்க்கை நடத்தும் கொடியவர்கள் என பெரும்பாணாற்றுப்படை (வரி 40-41) உருவகப்படுத்துகிறது.

"வாளேர் உழவன்" என்று அரசனையே குறிப்பிடுவதுண்டு (புறம்-368:12-13) போர்க்களத்தையே ஏர்க்களமாக உருவகப்படுத்திப் பாடும் பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. வயலில் கதிரறுத்துக் கடாக்களை விட்டுப் போரடித்துப் பொலிதூற்றும் கருங்கை வினைஞர்கள், நெற்குவியலில் தமக்குரிய பங்கை முகந்து கொள்வர். அப்போது கருங்கை வினைஞர், நிலக்கிழார்களைப் புகழ்ந்து பாடும் பாடல்கள் முகவைப்பாட்டு என வழங்கப்பட்டதென சிலப்பதிகாரத்தால் (10:136-137) தெரியவருகிறது. போரில் வெற்றிபெற்ற அரசனைப் புகழ்ந்துபாடும் பாணர்கள், அரசனிடமிருந்து யானைகளைப் பரிசிலாகப் பெறுதல், "முகவை" என்றே புறநானூற்றில்

உருவகமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. போர்க்களக் கிழானாகிய சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பின்வருமாறு பாடுகிறார்:

*விளைந்த செழுங்குரல் அரிந்து கால் குவித்து*
*படுபிணப் பல்போர்பு அழிய வாங்கி*
*எருதுகளிறாக வாள்மடல் ஓச்சி*
*அதரி திரித்த வாளுகு கடாவின்*
*அகன் கண் தடாரி தெளிர்ப்ப ஒற்றி*
*வெந்திறல் வியன்களம் பொலிகென்றேத்தி*
*இருப்பு முகஞ் செறித்த மருப்பின்*
*வரைமருள் முகவைக்கு வந்தனென் பெரும* (புறம். 370:14-21)

குரல் (கதிர், கழுத்து), கால் (உடலின் கால் பகுதி, நாற்றங்கால்), போர்பு (பொருதல், நெற்போர்), மடல் (பனையோலை போன்ற வாளின் வடிவம், பனங்கருக்கு) போன்று போர்க்களத்தோடு தொடர்புடைய ஒவ்வொன்றும் ஏர்க்களத்தோடு தொடர்புடையதாக உருவகப்படுத்திக் கூறப்படுவதோடு, களம் பாடுவோர் மலையளவு (யானை, நெல்மலை) முகந்து செல்வதற்கான வாய்ப்பும் உருவகப்படுத்தப்படுகிறது. இத்தகைய உருவகங்கள், ஏர்க்களக் கிழார்கள் சங்க காலத் தமிழகத்தில் உயரிய அந்தஸ்துடன் இருந்தமையைப் புலப்படுத்துகின்றன; போர்த் தொழிலையே உருவகப்படுத்துமளவுக்கு ஏர்த் தொழில் மிகவும் உயர்வாக மதிப்பிடப்பட்டதையும் உணர்த்துகின்றன.

பாண்டி நாட்டு ஏரின் வாழ்நரின் பெரிய இல்லத்து மனையாட்டியர், ஒரு புறப்பாடலில் (33:4-7) இடம் பெறுகின்றனர். இவர்கள் இல்லற தர்மத்துக்குரிய, ஆடவனின் தலைமையிலமைந்த குடும்பம் என்ற அமைப்புக்குட்பட்டவர்கள். பிச்சையேற்கும் நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்ட ஏதிலர்களைப் புரப்பதில் அரசர்களுக்கிணையாக இத்தகைய ஏரின் வாழ்நர் கருதப்பட்டனர். உறையூர் ஏணிச் சேரி முடமோசியாரின் புறப்பாடல் ஒன்று (பா. 375) ஏரின் வாழ்நரின் குடியைச் சேர்ந்தோரையும் பிற மன்னர்களையும் ஆய் அண்டிரனுடன் ஒப்பிட்டு, பாணர்களையும் புலவர்களையும் புரப்பதில் அவர்கள் ஆய் அண்டிரனோடு ஒப்பாக மாட்டார்கள் என்கிறது.

இத்தகைய விவரிப்புகளின் மூலம் சங்க கால ஏரின் வாழ்நர், மருத நில மகிழ்நன் மரபினரே என்றும், சுதந்திரமான வைசிய வருணத்தவராகத்தான் கருதப்பட்டிருக்க வேண்டும் என்றும் நாம் முடிவு செய்யலாம். களப்பிரர் ஆட்சியின் விளைவாகவும் உடனிகழ்ச்சியாகவும் வைசிய வர்ணம் குறித்த சமூகச் சட்டங்கள் மாற்றமடைந்தமையால் ஏருழவு என்பது வேளாள வர்ணத்தவரின் முதன்மையான தொழிலாக மாறிப்போயிற்று. இருப்பினும், "ஏரின் வாழ்நர்" என்ற பெயரை வேளாளர்க்குரியதாகக் குறிப்பிடும் திவாகர நிகண்டு (மக்கள் பெயர்த் தொகுதி, நூற்பா-32), வைசியர்க்குரிய பெயர்களுள் ஒன்றாக "ஏர்த் தொழிலர்" என்பதையும் சுட்டுகிறது. சமூகத்தின் பலவிதத் தகவமைவுகளுக்கிடையிலும் மரபுகள் தொடர்ந்து நீடித்து வந்தமையை இது உணர்த்துகிறது. சங்க காலத் தமிழகத்திலிருந்த ஏரின் வாழ்நரான நிலக்கிழார்கள், (பின்னாளைய சேக்கிழார் போன்ற) வேளாளர் குலக் கிழார்களாக இருந்திருக்க இயலாது. வைசிய வர்ணத்தவராகவே கருதப் பட்டிருக்கவேண்டும். நற்றிணையில் இருபாடல்கள் இயற்றிய மதுரைப் பள்ளி மருதங்கிழார் மகனார் சேரகுத்தனார் (சேர குப்தா) ஓர் எடுத்துக்காட்டாவார். திருவிளையாடற் கதையொன்று சற்று பிற்காலத்ததேயாயினும் சங்க கால மரபினைச் சரியான வகையில் பதிவுசெய்துள்ளது.

இறையனார் என்ற சங்ககாலப் புலவர் இயற்றிய "கொங்கு தேர் வாழ்க்கை" எனத் தொடங்கும் குறுந்தொகைப் பாடலை அடிப்படையாக வைத்துப் பிற்காலப் பாண்டியர் ஆட்சிக் காலத்தில், தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடற் புராணக்கதை புனையப்பட்டது. செண்பகமாற பாண்டியன் தன் மனைவியுடன் இளவேனிற் பருவ இன்ப நுகர்ச்சியில் ஈடுபட்டிருக்கும்போது தென்றல் சுமந்துவந்த மலர்களின் மணத்தைவிட உயரிய புதுமையான நறுமணம் கமழ்வதறிந்து அது தன் மனைவியின் கூந்தலுக்குரிய நறுமணமே என உள்ளுணர்வால் உணர்ந்தான்; ஆனால், அது இயற்கை மணமா, செயற்கை மணமா என்ற ஐயம் ஏற்பட்டது; செண்பகமாறனின் ஐயத்தைத் தீர்ப்பதற்காக இறைவனால் கொங்குதேர் வாழ்க்கை என்ற இப்பாடல் இயற்றப்பட்ட தென்றும் தமிழ்ச் சங்கத் தலைமைப் புலவரான நக்கீரர், இப்பாடலின் கருத்தை ஏற்காமல் முரண்பட்டதாகவும்[1] விரிந்து செல்லும் இக்கதை, இறைவனின் நெற்றிக்கண் ஆற்றலைப் பொறுக்க இயலாத நக்கீரர் பொற்றாமரைக் குளத்தில் வீழ்ந்து

கரையேறுதல், “இறையனார் களவியல்” என்ற அகப்பொருள் இலக்கணத்தை (அகத்தியர் மூலம்) அறிந்து உரை செய்தல் எனத் தொடர்கிறது. இறையனார் களவியலுக்குப் பல புலவர்கள் உரை செய்த்தாகவும் அவற்றுள் நக்கீரனின் உரையே சிறந்த்து என உப்பூரிக்குடிக்கிழார் மகனார் உருத்திரசன்மர் என்ற வைசியர்[2] சான்றளித்த்தாகவும் சங்கத்தார் கலகந்தீர்ந்த திருவிளையாடற் புராணக் கதை முதலான பழங்கதைகள் குறிப்பிடுகின்றன.

சங்க காலக் கல்வெட்டுகள் மிகக் குறைந்த எண்ணிக்கையிலானவை; பெரும்பாலும் சமண சமயம் சார்ந்தவை. அவற்றுள் வர்ணப் பிரிவுகள் குறித்தத் தெளிவான விவரங்கள் கொண்ட கல்வெட்டுகள் இல்லை. மதுரை மாவட்டம் சோழாந்தகத்திற்கு (சோழவந்தானுக்கு) அருகிலுள்ள மேட்டுப்பட்டியில் பொறிக்கப்பட்டுள்ள பிராமிக் கல்வெட்டிலும் (கி.மு. 2ஆம் நூற்றாண்டு) கரூர் மாவட்டம் ஐயர் மலையில் பொறிக்கப்பட்டுள்ள பிராமிக் கல்வெட்டிலும் (கி.மு. முதல் நூற்றாண்டு) வைசிய வர்ணத்தைக் குறிக்கக் கூடும் எனக் கருதத்தக்க குறிப்புகள் உள்ளன. மேட்டுப்பட்டிக் கல்வெட்டில் மதுரை நகரினைச் சேர்ந்த குடித்தந்தை எனக் கருதப்பட்ட, “விஸூவன்” என்பவர் இடம்பெற்றுள்ளார். ஐயர் மலைக் கல்வெட்டில் பனைதுறை என்ற ஊரைச் சேர்ந்த “வேஸன்” இடம் பெற்றுள்ளார்.[3] வைஸ்யன் என்பது பிராகிருத வழக்கில் விஸ், வெஸ்ஸ என்ற வடிவங்களில் பயன்படுத்தப்படுவதால், இவை வைஸ்ய வர்ணத்தவன் எனப் பொருள்படக்கூடும். இவை சமண சமயம் சார்ந்த ஆவணங்களாகும். இக்கல்வெட்டுகள் இடம் பெற்றுள்ள சமணப்பள்ளிகள் (கற்படுக்கைகள்) அரச ஆதரவுடன் உருவாக்கப்பட்டவை என்பதில் ஐயமில்லை. எனவே, அரசமைப்பினால் அங்கீகரிக்கப்பட்ட, சட்டபூர்வமான சமூக அமைப்புகள் குறித்த விவரங்களே இக்கல்வெட்டுகளில் இடம்பெற இயலும் என்பதால், சமண சமயத்தைப் பின்பற்றிய வைசிய வர்ணத்தவரைக் குறிப்பதாகப் பொருள் கொள்வது பொருத்தமே.

சேலம் மாவட்டம், ஓமலூர் வட்டம் அம்மன்கோயில்பட்டி பெருமாள் கோயில் பாறையில் பொறிக்கப்பட்டுள்ள, கி.பி. 4ஆம் நூற்றாண்டுக்குரியதாகக் கருதப்படும் பிராமிக் கல்வெட்டில், பரம்பன்கோகூர் அல்லது பரம்பன் கோவூர் என்ற ஊரின் கிழார் வம்சத்தவரான வியக்கன் கோபன் கணதேவன்,

சுனை தோண்டுவித்தச் செய்தி பதிவு பெற்றுள்ளது.[4] எவ்வித சமயச் சார்போ, அரச ஆதரவோ இல்லாமல் ஓர் உள்ளூர்த் தலைமகன், ஊர் மக்களின் பயன்பாட்டிற்காக, கம்மியர் முதலிய பணி மக்களின் உதவியுடன் சுனை தோண்டுவிப்பது, அந்நிகழ்வைக் கல்வெட்டுச் செய்தியாகப் பொறித்து வைப்பது ஆகியன, மாறிவிட்ட அரசியல்-சமூகவியல் சூழலை உணர்த்துகின்றன. இக்கல்வெட்டின் சமகால இலக்கியமாகக் கருதத்தக்க திருக்குறளில் (பொருட்பால், உழவு அதிகாரம், பா. 9)

*செல்லான் கிழான் இருப்பின் நிலம்புலந்து*
*இல்லாளின் ஊடி விடும்*

- என்ற குறட்பாவில், நிலமகளின் கணவனாக உருவகப்படுத்தப்படும் நிலக்கிழான் இடம்பெறுகிறான். இக்கிழார்கள், களப்பிரர் ஆட்சியின் உடனிகழ்ச்சியாக உருவான வைசியர்-வேளாளர் கூட்டுறவில் உதித்தவர்களாகவும் இருக்க வாய்ப்புண்டு.

கி.பி. 5ஆம் நூற்றாண்டுக்குரிய புதுக்கோட்டை சிவகங்கை மாவட்டங்களின் எல்லையிலமைந்துள்ள பூலாங்குறிச்சி - வேள்கூர்ப்பட்டிக் (வேகுப்பட்டி) கல்வெட்டில் (II வரி. 11-12) அம்பருகிழான் குமாரம் போந்தை நல்லங்கிழான் எயினங்குமான், ஆறு கிழான் கீரங்காரி ஆகியோர் உலவியப் பெருந்திணை எனப்பட்ட நில வருவாய் நிர்வாக உயரதிகாரிகளாக்க் குறிப்பிடப்படுகின்றனர்.[5] இக்கல்வெட்டு, கூற்றுவ நாயனார் எனக் கருதப்படும் கோச்சேந்தங்கூற்றனின் 192வது ஆட்சியாண்டுக்குரிய கல்வெட்டாகும். (களப்பிரர் ஆட்சி தொடங்கி 192 ஆண்டுகள் கழிந்தமையே இவ்வாறு குறிப்பிடப்படுகிறது போலும்.)

ஒரு சமூகத்தின் உள்முரண்பாடுகளால் அச்சமூகத்தின் வரலாற்றில் பெருந்திருப்பங்கள் நேரும்போது, அச்சமூகம் அத்திருப்பங்களுக்கேற்ப தன்னைத் தகவமைத்துக் கொள்வது இயல்பு. களப்பிரர் ஆட்சியால் நேர்ந்த அத்தகையத் திருப்பங்கள், தொன்மக் கதைகளில் பதிவு பெற்றுள்ளனவா என ஆராய்ந்தால் ஓர் அரிய செய்தி தெரியவருகிறது. களப்பிரர் ஆட்சிக் கால இலக்கியமாக்க் கருதத்தக்க மணிமேகலையில் (3:29; 7:102) காராளர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இச்சொல்லின் நேர்ப்பொருள் மேகத்தை அல்லது

மழையை ஆள்பவர் என்பதே. காராளர் என்பது வேளாளர்களைக் குறிக்கும் பொதுப் பெயராகப் பயன்படுத்தப்பட்டாலும், அயன் வெள்ளாளர் அதாவது அசலான வேளாளர் எனத் தம்மைக் குறிப்பிட்டுக்கொள்ளும் கார்காத்த வேளாளர்களைக் குறிப்பதற்குச் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. இது குறித்த கதையாவது: மேகங்களை உக்கிரபாண்டியன் சிறை செய்தபோது அம்மேகங்களை மீட்பதற்காக இந்திரன் பாண்டியனுடன் போரிட்டுத் தோற்றுவிடுகிறான். அப்போது இந்திரன் சார்பாக பாண்டியனிடம் பிணையாக நிற்பதற்கு 'நான் முன்வருகிறேன்' என முன்வந்த பாண்டி நாட்டு நாமுன்னூர் வேளாளன் ஒருவன் கார்காத்தான் எனப் பெயர் பெற்றதாகத் திருவிளையாடற் புராணம் குறிப்பிடுகிறது. நாம் முன்னர் குறிப்பிட்ட, கி.பி. 1637ஆம் ஆண்டுக்குரிய அரித்துவாரமங்கலம் செப்பேடு, (முதல் பக்கம், வரி 29) "மேகம் தளை விடுத்தும் புணை கொடுத்தும்" என இத்தொன்மக் கதையைக் குறிப்பிட்டுப் பெருமிதமடைகிறது. வேளாளர்களின் வரலாற்றாய்வில் இக்கதை முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது. ஏனெனில், காராளர் என்ற சொல்லோடு தொடர்புடைய "காராண்மை" என்பதே பயிரிடுபவனுக்கு விளைச்சலில் உரிய அதிகாரபூர்வமான பங்கினைக் குறிக்கும். இதனைப் பற்றி முன்னரே விவாதித்துள்ளோம்.

தண்டலை (தோட்டப்பயிர்) விவசாயத்தைக் கற்பித்த காமாட்சியன்னை தவம் செய்தது, மழை பெய்து நீர்வளம் பெருகுவதன் பொருட்டே என்பது, "தழுவக் குழைந்தார்" கதை மூலம் உறுதியாகிறது. கம்பை நதி என்பது பருவ மழை சார்ந்த நதியோ அல்லது ஜீவ நதியோ அன்று. பெருமழையால் பெருக்கெடுத்தோடும் ஓடையே. பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்ற தொண்டை மண்டலத் தண்டலைகள் எனப்படுவன, எல்லாக் காலத்திலும் தொடர்ந்து பலன் தரும், நட்டு வளர்க்கப்பட்ட பல மரங்கள் நிறைந்தவையாகும்.[6] இவற்றை, பூக்கின்ற தாவரங்கள் நிறைந்த வெப்ப மண்டலக் குறுங்காடுகள் எனலாம். Tropical dry forest என தாவரவியலாளர்கள் இவற்றை வகைப்படுத்துவர். இவை மேகங்களை ஈர்த்து மழை பொழிய வைக்கும் என்பதோடு, நிலத்தடி நீர்மட்டம் சரியான விகிதத்தில் பராமரிக்கப்படுவதற்கும் காற்றில் ஈரப்பதம் நீடிப்பதற்கும் உதவுவன. இத்தண்டலைகள் இந்திய நாட்டின் கீழைக் கடற்கரைப் பகுதிக்கு உரியவை என்றும் முற்காலத்தில் தொண்டை மண்டலத்தில் இவை நிறைந்த எண்ணிக்கையில் இருந்தன என்றும் சூழல் மாற்றங்களாலும், தானியப்

பயிர் விளைப்பின் பெருக்கத்தாலும், நாகரிக வளர்ச்சியின் விளைவாகவும் பல தண்டலைகள் அழிந்துபோயின என்றும், எஞ்சியிருப்பவற்றுள் ஒன்றே, சென்னை கிண்டியிலுள்ள தேசியத் தாவரவியல் பூங்கா என்றும் தாவரவியல் வல்லுநர்கள் கருதுகின்றனர்.[7] தண்டலைகளின் சுற்றுச்சூழல் பாதுகாக்கப்படும் வகையில் விவசாயப் பணிகள் மேற்கொண்டோரே தண்டலை உழவர்கள் எனலாம்.

காராளர் எனப்பட்டோர் நீர்வளத்தை ஆள்வோர் என அங்கீகரிக்கப்பட்டதன் அடையாளமாக நீர்ப் பூவான குவளை மலர் காராளர்க் குரியதாக்கப்பட்டது. களப்பிரர் ஆட்சிக் காலத்தில் உழுதொழிலாளர்களை கருங்கை வினைஞர்களாக்கி, உழவின் செயல்பாட்டு அம்சங்களைத் தீர்மானிக்கிற முதன்மை விவசாயிகளாக்க் காராளர் உருவாயினர். இக் காலகட்டத்தைச் சேர்ந்த சிலப்பதிகாரம் (10:132-135) கருங்கை வினைஞர்கள் ஏர்மங்கலம் பாடுவதைப் பின்வருமாறு வருணிக்கிறது:

*கொழுங்கொடி யறுகையும் குவளையும் கலந்து*
*விளங்கு கதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்*
*பாருடைப்பனர் போல் பழிச்சினர் கைதொழ*
*ஏரொடு நின்றோர் ஏர்மங்கலமும்*

ஏர்க் கலப்பைக்குரியோர் காராளர் ஆவார்; ஏர்க் கலப்பையில் அறுகம்புல்லும் குவளை மலரும் சூட்டி வழிபடுவோர் கருங்கை வினைஞராவர். குவளை மாலை சித்திரமேழிப் பெருக்காளர்க் குரியதென்பதற்குப் பிற்கால ஆதாரங்கள் உள்ளன.[8] சங்க கால அரசர்கள், பாடினியர்க்கும் விறலியர்க்கும் பொற்றாமரைப்பூச் சூட்டியமை போன்றே பொற்குவளை மலரையும் சூட்டிப் பெருமைப்படுத்தினர் என்பதற்கு புறநானூற்றில் சான்று உண்டு.[9] இது, பாணர்கள் அரசர்களாலும் பிற தலைமக்களாலும் வேளத்துப் பிள்ளைகளாக - காராளர்களாக - அங்கீகரிக்கப்பட்டமையை உணர்த்தும். மட்டுமின்றி, குறிஞ்சி நிலத்திற்குரிய சுனைப்பூவாகிய குவளை, குறிஞ்சி நிலத் தலைமகனாகிய நாடனால், பூத்தரு புணர்ச்சியின் அடையாளமாகப் பயன்படுத்தப்பட்டமையைக் குறுந்தொகையால் (பா. 346) அறியலாம்.
அரச குல ஆதரவுடன் வேளம் என்ற நிறுவனத்தின் மூலம் தண்டலை

உழவர்களால் உருவானவர்களின் வாழ்விடமே நாடு எனப்பட்டது. நாடு என்பது நில வருவாய் நிர்வாக அமைப்பாக உருவெடுத்தபோது இவர்களே முதன்மையான நாட்டார் ஆயினர். இவர்களின் ஆதிக்கம், கி.பி. 4-5ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்டு அரசியல் ஆதரவுடன் வேரூன்றியதன் விளைவாக, சிலப்பதிகாரத்தில் விவரிக்கப்படுவதைப் போல குவளை மலரை ஏர்க்கலப்பைக்குச் சூட்டி ஏர்மங்கலம் பாடும் வழக்கம் தோன்றிற்று. இந்நிலைமையினை, புதிதாக ஏர் பூட்டுபவர்கள், கொன்றை மாலையணிந்து ஏர் பூட்டினர் எனக் குறிப்பிடும் பதிற்றுப்பத்துச் (43:16) செய்தியுடன் ஒப்பிட்டுக் காண்பது பொருத்தமாகும். கொன்றை மாலை, காளையை அடக்கி வீட்டு விலங்காக ஆக்கித் தொடக்க நிலை விவசாயப் பணிகளுக்குப் பயன்படுத்திய, சிவபிரானின் முன்னிலை வடிவமாகிய கூற்றுத் தெய்வத்துக்குரியது என்பது கவனத்திற்குரியதாகும். குவளை மலர் பார்வதி தேவிக்குரியது என்ற பொருளில், பார்வதி தேவிக்குத் தன் உடலின் ஒரு கூற்றினை வழங்கிய சிவபெருமானைக் "குவளைக் கண்ணிக் கூறன்" என வருணிப்பதுண்டு.

பெரும்பாணாற்றுப்படையில் தண்டலை உழவர்கள் வாழ்விடமே "நாடு" எனக் குறிப்பிடப்பட்டது எனக் கண்டோம். நாடு என்ற சொல், மரம் நட்டு வளர்த்து, குறிப்பிட்ட மரங்களின் தொகுதியை அடையாளமாகக் கொண்டு வாழும் மக்களின் வாழ்விடம் என்ற பொருளில் தோன்றியிருக்கலாம். அவ்வாறாயின், தாய்வழிச் சமூகப் பண்பாட்டு நிலையில் அறிமுகப்படுத்தப்பட்ட தோட்டப்பயிர் விவசாயமே "நாடு" என்ற கருத்தோட்டத்திற்கு அடிப்படை எனலாம்.[10] புறநானூற்றில் ஒரு பாடலில் (பா. 187) "காடு" என்பதற்கு எதிரானதாக "நாடு" குறிப்பிடப்படுகிறது என்பது உண்மையே ஆயினும் வேறோர் பாடலில் (புறம் 49) குறிஞ்சித் திணை சார்ந்த மலை வளமும் தண்டலை வளமும் கொண்ட வாழ்விடமே "நாடு" எனப் பொருள்படும் குறிப்பு உள்ளது.[11] மலைகளில் பல்வேறு வகை மரங்கள் இருக்குமாதலால், விளைச்சலுக்குரியதல்லாத காலத்திலும் பலன் தரும் மரங்கள் நிறாஇந்து, இடையறாத விளைச்சல் உடையது மலை என புறம் (116:13-14) குறிப்பிடுகிறது. இக்குறிப்பினைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும் - நாம் மேலே குறிப்பிட்டுள்ள தொண்டை மண்டலத் தண்டலைகளின் இடையறா விளைச்சல் பற்றிய விவரத்துடன் ஒப்பிடலாம்.

தண்டலை உழவர்களாகவும் அரச குலத்தவரின் வேளத்துப் பிள்ளைகளாகவும் இருந்த காராளர்கள், வாயிலோர் பதவிகளில் அமர்ந்ததன் மூலம் பன்னாட்டுத் தகவல் தொடர்பும், ஆட்சி நிர்வாக அனுபவமும், நீர் ஆதாரங்களைப் பராமரிக்கும் அறிவியல் தொழில்நுட்ப அறிவும் பெற்று உயர் தகுதியடைந்தனர். மழை சார்ந்து விளைவிப்பதில் ஈடுபட்டு வந்திருந்த மள்ளர், பறையர் போன்ற பூர்வகுடி விவசாயிகளைவிடத் தொழில்நுட்பத் திறமை பெற்று முன்னேற்றமடைந்தனர். களப்பிரர் ஆட்சி உருவாவதற்கே இவர்களின் வளர்ச்சி பெற்ற தொழில்நுட்ப அறிவும் நிர்வாக அறிவும் முதன்மையான காரணமாக இருந்திருக்க வேண்டும். களப்பிரர் ஆட்சிக் காலத்தில் நாட்டார் என்ற தகுதியைக் காராளர்கள் முழுமையாக அடைந்தனர் எனலாம்.

களப்பிரர் ஆட்சி முடிந்து மீண்டும் பாண்டியரின் ஆட்சி ஏற்பட்டபோது, காராளர்கள் (வேளாளர்கள்) அரச குலத்தவரின் சார்புக் குடிகளாகியிருக்க வேண்டும். ஆயினும், அவர்கள் நில வருவாய் நிர்வாகத்தில் ஓர் அங்கமாகத் தொடர்ந்தனர் என்பதையும், பூர்வகுடி மள்ளர்கள், வேளாளர்களுக்குக் கட்டுப்பட்ட கருங்கை வினைஞர்களாக நீடித்தனர் என்பதையுமே, மேகம் தளை விடுத்தும், பிணையாக இருந்தும் - நீர்ப்பாசனப் பணிகளும் விவசாயப் பணிகளும் தொய்வின்றித் தொடர்வதற்கு அரச குலத்தவரின் உறுதியளித்தும் - தமது செயல்பாட்டைத் தொடர்ந்ததாக வேளாளர்கள் தங்கள் ஆவணங்களில் கூறிக்கொள்வது உணர்த்துகிறது.

இந்த இடத்தில் முதன்மையான ஒரு கேள்வி எழுகிறது. காமாட்சியின் திருத்தலப் புராணத்தில் இத் தொன்மக் கதை இடம்பெறாமல், மீனாட்சியின் திருத்தலப் புராணத்தில் இடம்பெறக் காரணம் என்ன? தொண்டைமான் இளந்திரையன் காலத்தில் எழுச்சி பெறத் தொடங்கிய காராளர்கள், பின்னர் களப்பிரர் ஆட்சிக் காலத்தில் முழுமையான ஆதிக்கம் பெற்றனர். பல்லவ மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் தொண்டை மண்டலத்தில் அவர்கள் அரச குலத்தவர்களிடம் பிணை நிற்கும் தேவை ஏற்படவில்லை. கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பெண்ணாகடத்து அச்சுதக் களப்பாளரின் மகனான மெய்கண்டார் என்ற வேளாண் பெருமகன், சைவ சமயத் தத்துவமான சைவ சித்தாந்தத்தை உருவாக்கிய சந்தானக் குரவராக உருவெடுத்த நிகழ்வு, தொண்டை நாட்டிலும் அதன் அண்டைப் பகுதிகளிலும் வேளாளர் எழுச்சி

சீராகத் தொடர்ந்ததை உணர்த்தும். கி.பி. 17ஆம் நூற்றாண்டில் திருப்போரூரை அடுத்த தையூர் விசமூர்க் காட்டுப் பகுதியில் உத்தண்ட களப்பாளன் என்ற தொண்டை மண்டல வேளாளர் சிற்றரசராக ஆட்சி புரிந்துள்ளார். இவர் மீது "உத்தண்ட களப்பாளன் கோவை" என்ற இலக்கியம் இயற்றப்பட்டது.[12]

பாண்டிய நாட்டிலோ, பாண்டியர்கள் களப்பிரரிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றிய பின்னர், களப்பிரர்கள், அரச குலத்தவரின் சார்புக் குடிகளாக்கப்பட்டனர். களப்பிரர்கள், கி.பி. 3ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் அல்லது நான்காம் நூற்றாண்டில் மூவேந்தர் ஆட்சியை அகற்றினர் என்பது வரலாற்றில் பதிவாகியுள்ள செய்தியாகும். அச்சுத விக்ராந்தன் என்ற களப்பிர அரசன் மூவேந்தரையும் தில்லை நகரில் சிறையில் அடைத்து வைத்திருந்தான் என்றும், அப்போது தங்களை விடுவிக்கக் கோரி மூவேந்தர்களும் வெண்பாக்கள் இயற்றிப் பாடினர் என்றும் பழங்கதைகள் கூறும். கி.பி. 16-17ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் தமிழ் நாவலர் சரிதை என்றா நூலிலும் தனிப்பாடல் திரட்டு நூலிலும் இப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

சேரன் பாடிய வெண்பா:

*திணை விதைத்தார் முற்றம் திணையுணங்கும் செந்நெல்*
*தனை விதைத்தார் முற்றமது தானாம் - கனைசீர்*
*முரசுணங்கும் சங்குணங்கும் மூரித்தேர்த்தானை*
*அரசுணங்கும் அச்சுதன் தன் முற்றத்து.*
*சோழன் பாடிய வெண்பா:*
*அரசர் குல திலகன் அச்சுதன் முற்றத்தில்*
*அரசரவதரித்த அந்நாள் - முரசதிரக்*
*கொட்டிவிடும் ஓசையினும் கோவேந்தர் காற்றளையை*
*வெட்டி விடும் ஓசைமிகும்.*
*பாண்டியன் பாடிய வெண்பா:*
*குறையுளார் எங்கிரார் கூர்வேலி ராமன்*
*நிறையறு திங்களிருந்தார் - முறைமையால்*
*ஆலிக்குந்தானை அலங்குதார் அச்சுத முன்*

*வாலிக் கிளையான் வரை*

சேரனும் சோழனும் தம்மைத் தாழ்த்திக் கொண்டு இறைஞ்சி வேண்டியதால் - சோழன், களப்பிரனை "அரசர் குல திலகன்" என்றே பாடிவிட்டதால் - மனம் மகிழ்ந்த அச்சுதக் களப்பாளன் அவ்விருவரையும் உடனே விடுதலை செய்தான் என்றும், பாண்டியன் சிறைப்பட்டிருந்த நிலையிலும் பெருமிதம் குறையாமல் தன்னை இராமனுடன் ஒப்பிட்டுக் கொண்டதால் அவனுக்கு அச்சுத விக்ராந்தன் கூடுதல் விலங்கிட்டான் என்றும், பாண்டியன் மிகவும் பணிந்து வேறொரு வெண்பாப் பாடினான் என்றும், அதன் பின்னரே விடுதலை பெற்றான் என்றும் அக்கதை குறிப்பிடுகிறது.

பாண்டியன் பாடிய மற்றோர் வெண்பா:

*குடகர் குணகடலென்றார்த்தார் குடகர்க்*
*கிடகர் வடகடலென்றார்த்தார் - வடகடலர்*
*தென்கடலென்றார்த்தார் தில்லையச்சுதானந்தன்*
*முன்கடை நின்றார்க்கும் முரசு*

இப்பாடல்கள் கி.பி. 16-17ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருக்கலாம். மூவேந்தர்களுள் பாண்டியன் மட்டுமே மேகத்தைச் சிறைசெய்து, சிறை விடுவிப்பதற்குக் காராளர்களைப் பிணையேற்குமாறு செய்தவன் என்பதாலும் இவ்வாறு கூடுதலாக இழிவுபடுத்தும் வகையில் பாண்டியன் இருமுறை களப்பிரரிடம் வேண்டிக்கேட்டு விடுதலை பெற்றதாக வேளாளர்கள் எழுதியிருக்கக் கூடும். அரித்துவாரமங்கலம் வேளாளர் செப்பேடு (முதல் பக்கம் வரி.28), அச்சுதக் களப்பாளன் மூவேந்தரைச் சிறைசெய்த நிகழ்வினைத் தமது குலப் பெருமையாகக் குறிப்பிடுகிறது. "சேர சோழ பாண்டிய மூவரைச் சிறைவைத்தும் நாவிசைத்த தமிழ் கொண்டும்" என்பது செப்பேட்டு வாசகமாகும். களப்பிரரின் அருஞ்செயலைத் தமது குலத்தவரின் பெருமைக்குரிய தொன்மமாகக் குறிப்பிட்டுக் கொள்வது தமிழ்ச் சமூக வரலாற்றாய்வுக்கு மிகவும் பயன்படும் செய்தியாகும். தம்மைப் பாடவைத்தும் ஆடவைத்தும் வேளத்துப் பிள்ளைகளாக்கியும் மகிழ்ந்த அரச குலத்தவர்களை வேளாளர்கள் சிறைப் பிடித்துத் தங்களைப் புகழ்ந்து பாடுமாறு செய்து, அச்செயல்களை

ஆவணங்களிலும் பதிவு செய்தனர் என்பது வரலாற்றில் புதுமையான நிகழ்வன்று என்றாலும் தமிழ்ச் சமூக வரலாற்றாய்வுக் கண்ணோட்டத்தில் சற்றே வியப்படைய வைக்கும் ஒரு நிகழ்வுதான். "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" என்ற பழமொழிக்கிணங்கவும், வரலாறென்பது தலைகீழாகத் திரும்பக் கூடியது (history repeats itself) என்ற பொன்மொழிக்கிசையவும் இந்நிகழ்வு நடந்தேறியது என்றாலும், இது குறித்த தரவுகளைச் சமூக வரலாற்றாய்வுக் கண்ணோட்டத்தில் பரிசீலித்தால்தான் இதன் பன்முகப் பரிமாணத்தை உணர இயலும்.

**அடிக்குறிப்புகள்:**

1. சமணர்களை நிகந்தர் எனக் குறிப்பிடுவதுண்டு. இது நிர்க்ரந்தர் (கட்டுகளிலிருந்து விடுபட்டவர்) என்ற சொல்லின் திரிபாகச் சில அறிஞர்களாலும், நிர்கந்தர் (வாசனைகளிலிருந்து விடுபட்டவர்) என்ற சொல்லின் திரிபாகச் சில அறிஞர்களாலும் கருதப்படுகிறது. நக்கீரர் நிகந்தராக இருந்து வைதிக வழிபாட்டு மரபுக்கு மாறியவர் என்பதைக் குறிக்கும் வித்ததில் இக்கதை புனையப்பட்டிருக்கலாம்.

2. உருத்திரசன்மர் என்பது ருத்திரசர்மா என்ற பெயரின் தமிழ்த் திரிபெனச் சிலரால் தவறாகக் கருதப்படுகிறது. "ருத்திரஜன்மன்" என்பதே உருத்திர சன்மன் என வழங்கிற்று. "ஜடிலத்தவனிட்ட விசிட்ட குலத்தொரு செட்டியிடத்தினுதித்ருள் வித்தக ருத்ர ஜன்மன் பெயர் செப்பியிடப் பரிவாலே" என அருணகிரிநாதன் தமது பழனிபதித் திருப்புகழில் குறிப்பிட்டுள்ளார். இப்பெயர், "சிவன் மகன்" என்ற பொருளில் முருகனுக்குரியதாக வழங்கும். முருகனே உருத்திரசன்மனாகப் பிறந்தான் என திருவிளையாடற்புராணம் விவரிக்கும்.

3. pp. 355, 387, Early Tamil Epigraphy, Iravatam Mahadevan, CreA, Chennai, 2003. "மதிர அந்தை விஸூவன்" என்றும் "பனைதுறை வேஸன் அதட் அனம்" என்றும் பொறிக்கப்பட்டுள்ளன.

4. p.439, ibid. "பரம்பன் கோகூர் கிழார் மகன் வியக்கன் கோபன் கணதேவன் தொட சுனை" என்ற வாசகம் இடம்பெற்றுள்ளது. கோவூர் என்பதே கோகூர்

என எழுதப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. "வேள்வூர்" (வேள்வு ஊர் = வேள்வி நிகழ்ந்த ஊர்) என்பது பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் "வேள் கூட" எனப் பொறிக்கப்பட்டுள்ளது ஒப்பிடத்தக்கது. கோகூர் என்ற பெயரில் வகர உடம்படுமெய்க்குப் பதிலாக்க் ககர உடம்படு மெய் இடம் பெற்றிருப்பது கன்னட மொழித் தாக்கத்தினால் ஆகலாம். கிழார் மகன் என்பது சேர மகன் (சேரமான்), அதிய மகன் என்பது (அதியமான்) என்பவைபோலக் கிழார் வம்சத்தவன் என்றே பொருள்படும்.

5. பக். 69, ஆவணம் இதழ் - 1, தமிழகத் தொல்லியல் ஆய்வுக் கழக வெளியீடு, அக்டோபர் 1991. இக்கல்வெட்டில், "வேள் மருகண் மகன் கடலகப் பெரும்படைத் தலைவன் எங்குமான் வேள்கூர்ப் பச்செறிச்சில் மலை மேற் செய்வித்த தேவகுலம்" (பாசுபத சைவக் கோயில் அல்லது பள்ளிப்படைக் கோயில்) குறிப்பிடப்படுகிறது. இக்கோயில், இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ள பாறைக்கு அருகிலுள்ள சிறு குன்றின் மேல் யக்ஞேஸ்வர்ர் (வேள்வு ஊர்ச் சிவன்) கோயில் என்ற பெயரில் இன்றும் உள்ளது. கட்டட அமைப்பில் பல மாற்றங்கள் நிகழ்ந்திருப்பினும் இக்கோயில், கி.பி. 5ஆம் நூற்றாண்டுக் கோயிலே என்பதில் ஐயமில்லை.

6. *வீயாணர் வளங்கெழு பாக்கத்துப்*
*பன்மர நீளிடை* (பெரும்பாண். 366-67)

7. "தண்டலம்" என்ற ஊர்ப் பெயர்ப் பின்னொட்டு தொண்டை மண்டலத்தில் பரவலாக உள்ளது. இப்பகுதியில் பிரபலமாகவுள்ள கருமாரியம்மன் வழிபாட்டில் தண்டலையுழவர்களின் பூர்விக வழிபாட்டு மரபின் எச்சங்களைக் காண இயலும்.

8. "குவளையந்தாருடன் களபப் புயத்தோர்" - ஆறு நாட்டு வேளாளர்கள் தாமிரப் பட்டய நகல். குமாரிலீலா. "கல்வெட்டு" தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை காலாண்டிதழ், இதழ் - 16, நள வருடம், தை மாதம் 1977. "பூங்குவளை மாலை புனை புயத்தான்" - தளவாய் முதலியாரவர் பேரில் அமுத ரஸ மஞ்சரி, கண்ணி 102, - மேலகரம் திரிகூட ராசப்ப கவிராயர் இல்லத்திலிருந்து திரு. அறிவுமதியால் சேகரிக்கப்பட்ட சுவடி, பதிப்பு: "கல்வெட்டு", இதழ் 11, நள, ஐப்பசி 1976.

9. *பணி நீர்ப் பூவாமணி மிடை குவளை வால்நார்த்*
*தொடுத்த கண்ணி - - - பெற்றனர் -* புறம் 153:7 (ஆதனோரிடைய வன்பரணர் பாடியது.)

10. "நள்" என்ற வேர்ச்சொல் உறவுகொள், பொருந்திவாழ் என்ற பொருள்கள் உடையது. ஒத்த இயல்புடைய மனிதக் குழுக்கள் உறவுகொண்டு வாழும் இடம் அல்லது அமைப்பு (மாநாடு என்றா வழக்கு காண்க) என்ற பொருளில் "நாடு" என்ற வழக்கு உருவாகியிருக்க வாய்ப்புண்டு. ஆயினும் nature, nation, nativity போன்ற (இலத்தீன் மூலமுடைய) சொற்கள் நன்செய், புன்செய் முதலான "செய்"கள் போல் செயற்கையாகவன்றி, இயற்கையோடு இணைந்து உருவாக்கப்பட்ட "நாடு" என்ற வாழ்விடத்தைக் குறிப்பது சிந்தனையைத் தூண்டுகிறது. எனவே தோட்டப் பயிர் விவசாயம் தொடர்பான "மரம் நடவு" நாடு என்ற கருத்தோட்டத்திற்கு அடிப்படையாக் இருந்திருக்கவும் வாய்ப்புண்டு.

11. சேரமான் கோக் கோதை மார்பனைப் பொய்கையார் பாடிய இப்பாடலில், "நாடன் என்கோ, ஊரன் என்கோ பாடிமிழ்ப் பனிக் கடற் சேர்ப்பன் என்கோ" என்ற வரிகள் இடம் பெற்றுள்ளன. "குறிஞ்சி நிலம் உடைமையால் நாடன் என்று சொல்வதா, மருத நிலம் உடைமையால் ஊரன் என்று சொல்வதா, நெய்தல் நிலம் உடைமையால் சேர்ப்பன் என்று சொல்வதா" என்று உரையாசிரியர் பொருள் கூறுகிறார். (ப.120 புறநானூறு மூலமும் பழைய உரையும், உ.வே. சா. நூலகப் பதிப்பு, 1971.)

12. சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தாரால் இந்நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

**வண்ணக மறைவல கண்ணுளாளர்**

இசையும் கூத்துமாகிய குயிலுவ வினை, வேளாளர் அறுதொழில்களுள் ஒன்றென நிகண்டுகள் குறிப்பிடுவது பற்றி முன்னரே விவாதித்தோம். சங்க இலக்கியங்களில் பாணரும் பொருநரும் விறலியருமே இசைஞராகவும், கூத்தராகவும் குறிப்பிடப்படுகின்றனர். பறை, துடி, கடம் (குடம்) ஆகிய இசைக்கருவிகளின் பெயர்த் தொடர்பில் தோன்றிய பறையர், துடியர், கடம்பர் ஆகிய குடியினரின் பெயர்கள் புறநானூற்றில் (335:7-8) குறிப்பிடப்படுகின்றனர். பாணர், பாடினி ஆகிய பெயர்கள் பண், பாட்டு என்பவற்றை அடிப்படையாகக்கொண்டு தோன்றியவை. இப்பூர்வ குடிகளுள் பறையர் மட்டுமே தமிழகத்தில் காட்சிக்குப் புலனாகும் சாதியினராக உள்ளனர். துடியரின் கருவியாகிய துடி கர்நாடகத்தில் வழக்கிலுள்ளது. பாணர் குடியினரும் கடம்பரின் வழித்தோன்றல்களான கடபர் என்ற இசைக் கலைஞர் குடியினரும், ஒரிஸா மாநிலத்தில் வாழ்கின்றனர்.[1]

சங்க காலப் பாணர் பறையர் முதலிய குடிகள் பொருளாதார நிலையில் உயர்வாக இல்லாவிடினும் திணைக்குடிகள் போன்று சுதந்திரமான அந்தஸ்துடையோர் என்ற வகையில் வைசிய வர்ணத்தவராகவே கருதப்பட்டிருக்க வேண்டும்.[2] மேற்குறித்த புறநானூற்றுப் பாடல் வரிகளில் இடம்பெற்றுள்ள, குடிப்பெயர்களாகிய துடியன், பாணன், பறையன், கடம்பன் என்ற ஆண்பாற் பெயர்கள் ஆண் தலைமையிலான குடும்பம் என்ற அமைப்பைப் பின்பற்றிய குடிகளாகவே அவை இருந்தன என்பதை உணர்த்துகின்றன.[3] துடியர்கள், தலைமக்களின் அல்லது போர்க்குடியினரின் சுப அசுப நிகழ்வுகளுக்குப் பறை கொட்டும் புலைச் சாதியினராகக் கருதப்பட்டனர் என்பதற்கு ஒரிரு எடுத்துக்காட்டுகள் இருக்கின்றன என்பது உண்மையே. "துடி யெறியும் புலைய எறிகோல் கொள்ளும் இழிசின" (புறம் 287:1-2) என்றும், "பூக்கோள் இன்றென அறையும் மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே" (புறம் 289:9-10) என்றும் அமைந்த பாடல் வரிகள் இதற்குச் சான்றாகும். புலையர் சாதியினர் கழிவு அகற்றுதல், தலைமக்களின்

துணிகளை வெளுத்தல் (புறம். 311:2) போன்ற பணிகளைப் புரிந்தனர் எனத் தெரிகிறது. இத்தகைய பணிகளுடன், சாப்பறை கொட்டுதல், பிணத்தைக் குளிப்பாட்டுதல், பிண்டம் வைத்தல் முதலிய மரணச் சடங்குகள் செய்தல் (புறம். 360:19-20) துடியர்களின் பணியாக இருந்தமையாலும், ஆவிகளுடன் தொடர்பு கொள்வோர் என்ற அடிப்படையில் அச்சத்திற்குரியோராகக் கருதப்பட்டமையாலும்[4] இவர்கள் இழிசினராகக் கருதப்பட்டிருக்கலாம். ஆனால், பாணர், பறையர் ஆகியோர் இழிசினராகக் கருதப்பட்டமைக்குச் சான்றுகள் இல்லை.

பாணர்களுள் பெரும்பாணர் பட்டம்பெற்ற இசைஞர்கள் வேளாண் வாயிலோராக ஆனதன் விளைவாகச் சுதந்திரமான வைசிய வர்ண அந்தஸ்திலிருந்து தாழ்ந்து சூத்திர வர்ணத்தவர் ஆயினர்.[5] ஆயினும், வேளம் என்ற நிறுவனத்தில் சேர்க்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட உயர்குடிப் பெண்டிருடனும் அவர்கள் வர்க்கத்தாருடனும் கொண்ட உறவு, பல்வேறு நாகரிக நடைமுறைகளைக் கற்றுக்கொண்டதன் மூலம், உருவாகிக்கொண்ட தோரணைகள், இவ்வனைத்துக்கும் மேலாக வேளாண் வாயிலோராக இருப்பதன்மூலம் கிட்டுகிற பொருளாதார நலன்கள் ஆகியன சூத்திர வர்ண அந்தஸ்தினை ஏற்றுக்கொள்வதற்குரிய மனச் சமாதானத்தை இவர்களுக்கு அளித்திருக்கும் எனலாம். இதன் பின்னர், வணிக வர்க்கமும் வைசிய வர்ணமும் ஒன்றென்ற நிலை உருவாகத் தொடங்கியதன் உடன் நிகழ்ச்சியாகவும் வணிக வர்க்கத்தவருடன் ஒத்திசைந்து தம் பொருளாதார நலன்களை வேளாளர்கள் உறுதிப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். நிலப்பிரபுத்துவச் சமூக அமைப்பு உறுதிப்படும் காலகட்டம் உருவாகியபோது துல்லியமான வேளாளர் சாதி அமைப்பு தோன்றிவிட்டதால் பூர்வ குடி நிலையிலேயே நின்றுவிட்ட தமிழகப் பாணர்கள், உழுகுடிகளான பறையர் சாதியினருடன் தம்மை ஐக்கியப்படுத்திக்கொண்டு கருங்கை வினைஞர்கள் என்ற ஒட்டுமொத்த வடிவில் பரிணமித்தனர் என ஒருவாறு வரையறை செய்யலாம். சங்க காலத்தின் ஒரு கட்டத்திலேயே புலையர் சாதியினராகக் கருதப்பட்ட துடியர்கள் (கடம்பரும் இவர்களுடன் இணைந்திருக்கலாம்) இழிசினர்களாகத் தொடர்ந்து நீடித்துவந்தனர் என முடிவு செய்யலாம். இத்தகைய பரிணாமம் நிகழும்போதே மள்ளர் சமூகத்தவர் பிறிதொரு வகை விவசாயக் குடியினராக - வெட்சிப் போர் மரபினரையும் காராளர்களையும் சார்ந்த ஆற்றுக்கால் ஆளர்களாகவும்

(காலாடி) பண்ணை உழவர்களான கருங்கை வினைஞர்களாகவும் உருவாயினர் எனத் தோன்றுகிறது.

மருத நிலக் கிணைப்பொருநர்கள், "வாட்டாற் றெழினியியாதன் கிணையேம்" (புறம். 396:13-14); "இலங்கைக் கிழவோன் வில்லியாதன் கிணையேம்" (புறம்: 379:6-7)[6] என்பன போன்று தலைமக்களுக்குரிய பணிமக்களாகச் சில இடங்களில் குறிப்பிடப்படுகின்றனர். மதுரை நக்கீரர் பாடிய ஒரு புறப்பாடலில் (395:20-21) "பிடவூர்க் கிழார் மகன் பெருஞ்சாத்தனின் கிளையினராக (குலத்தின் உட்பிரிவு) பொருநர் அல்லது பாணர் குறிப்பிடப்படுகின்றனர். ("நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர் அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம்.") 'கிணையேம்' என்பது 'கிளையேம்' என்று தவறாகப் பிரதியெடுக்கப்பட்டிருக்கவும் வாய்ப்பிருக்கிறது. ஆயினும், தலைமக்களின் கிளைையினராகப் பணிமக்கள் (கிணைப் பொருநர்கள்) சொல்லிக்கொள்வதும் உறவு கொண்டாடுவதும் இயல்பே என்பதால் பிடவூர்க்கிழார் மகன் பெருஞ்சாத்தனின் கிளையினராக - அதாவது, வேளத்துப் பிள்ளைகளாக இப்பாணர் அல்லது பொருநரைக் கருதுவது தவறாகாது.

சங்க காலப் பாணர் - கூத்தர் வரலாற்றில் இது முதன்மையான அம்சமாகும். அதனால்தான் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சைவ வைணவ பக்தி இயக்கம் தோன்றிய பின்னர், அவ்வியக்கத்தின் வளர்ச்சிக்குத் தமிழிசையும் தமிழ்க்கூத்தும் ஆற்றிய பங்கினை வரலாற்று ஆய்வாளர்கள் தெளிவாக உணர்ந்துகொள்கிற அளவிற்குத் தமிழிசை, தமிழ்கூத்து ஆகியவற்றின் உட்கூறுகளை அவர்கள் புரிந்துகொள்ள இயலாத வண்ணம், குழப்பம் நேர்கிறது. திருநீலகண்ட யாழ்ப்பாணரும் திருப்பாணாழ்வாரும் முறையே சைவ, வைணவ அடியார்களாக அங்கீகரிக்கப்பட்டிருப்பினும் கி.பி. 10ஆம் நூற்றாண்டில் தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்ணமைக்கும் முயற்சி தொடங்கியபோது தமிழகத்தில் பாணர் மரபே இல்லை என்று கூறுமளவுக்கு ஒரு வெற்றிடம் உருவாகியிருந்தது. பூர்விகத் தமிழிசைக் கலைஞர் - தமிழ்க் கூத்தர் சாதியினருள் பெரும் பகுதியினர் நிலப்பிரபுத்துவப் பண்ணைக் கைவினைஞர் சாதிகளுள் கலந்துவிட்டனர் என்றும் சங்க காலத்திலேயே பெரும் பாணர்களாகவும், அரங்கக் கூத்தர்களாகவும் உருவாகிவிட்ட இசைஞர் - கூத்தர்கள், பாணர் - பறையர் பழங்குடி நிலையிலிருந்து விலகி,

வேளாளர் சாதிக் குழுக்களுள் ஒன்றில் இணைந்துவிட்டனர் என்றும் நாம் அனுமானிக்கலாம்.

சங்க காலக் கூத்த மரபினரின் பரிணாம வளர்ச்சி குறித்த சில செய்திகள் மலைபடுகடாத்தையும், சிலப்பதிகாரத்தையும் ஒப்பிட்டு ஆராயும்போது தெரியவருகின்றன. மலைபடுகடாம் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்து (திருவண்ணாமலை அருகேயுள்ள செங்கம்) நன்னன்செய் நன்னன்மீது இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியதாகும். இந்நூலுக்குக் கூத்தராற்றுப்படை என்ற வேறு பெயரும் உண்டு. இம்மாற்றுப் பெயருக்குக் காரணமாக இருப்பது, நன்னன்சேய் நன்னனிடம் ஆற்றுப்படுத்தப்படுபவனை முன்னிலைப்படுத்தி விளிக்குமிடத்தில் (வரி 50இல்) “கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ” என்ற விளி இடம்பெற்றிருப்பதே “பேரணிகலன்களை அரசரிடமிருந்து பரிசாகப் பெறும் கூத்தருடைய சுற்றத்துக்குத் தலைவனே” என்பது இதன் பொருளாகும். கண்ணுளர் என்ற சொல்லுக்குக் கூத்தர் என்பதே பொருளாகும்.

சிலப்பதிகாரம் இந்திரவிழவூரெடுத்த காதையில் புகார் நகரின் இரு பகுதிகளாகிய மருவூர்ப்பாக்கமும் பட்டினப்பாக்கமும் தனித்தனியாக வர்ணிக்கப்படுகின்றன. மருவூர்ப்பாக்கம் என்பது கடற்கரையிலும், பட்டினப்பாக்கம் என்பது மருவூர்ப்பாக்கத்தைத் தொட்டடுத்து உள்நாட்டிலும் இருந்தன. மருவூர்ப்பாக்கத்தில் எளிய பொதுமக்களும் பட்டினப்பாக்கத்தில் அரசமைப்பைச் சார்ந்தோரும் வாழ்ந்தனர். பட்டினப்பாக்கத்தில்தான் வீழ்குடி உழவர்கள் வாழ்ந்தனர். இவ்வீழ்குடி உழவர்களுடன் இணைந்து வாழ்ந்த அரசமைப்புச் சார்பாளர்களின் இருக்கை பின்வருமாறு வர்ணிக்கப்படுகிறது.

*சூதர் மாகதர் வேதாளிகரொடு*
*நாழிகைக் கணக்கர் நலம்பெறு கண்ணுளர்*
*காவற் கணிகையர் ஆடற் கூத்தியர்*
*பூவிலை மடந்தையர் ஏவற் சிலதியர்*
*பயில் தொழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர்*
*நகைவேழம்ப ரொடு வகை தெரியிருக்கை*

(சிலம்பு. 5:48-54)

"நலம்பெறு கண்ணுளர்" எனப்படுவோர் சாந்திக்கூத்தர் என அரும்பத உரைகாரர் விளக்கமளிக்கிறார்.[7] அடியார்க்கு நல்லாரோ சாந்திக்கூத்தர் என்று பொருள்கூறி அரிதாரம் புனைந்து ஆடுகின்ற அரங்கக்கூத்தர்கள் என விளக்கமளிக்கின்றார்.[8] அதாவது, வேத்தியல் மரபுப்படி வேடம் புனைந்தாடும் அரங்கக்கூத்தரே நலம்பெறு கண்ணுளர் எனப்பட்டனர் என்பது அடியார்க்குநல்லார் கருத்தாகும். நலம் பெறுதல் என்பது அலங்கரிக்கப்பெறுதல் (ஒப்பனை செய்யப்படுதல்) என்பதோடு, தலைமக்களால் ஆதரிக்கப்பெறுதலையும் அதன்மூலம் பெருமை பெறுதலையும் குறிக்கும். சிலப்பதிகாரத்தில் இதே இந்திர விழவூரெடுத்த காதையில் இந்திர விழாவின்போது இசை நிகழ்ச்சிகள் நடந்தமை பற்றி விவரிக்கப்படுகின்ற இடத்தில்,

*கண்ணுளாளர் கருவிக் குயிலுவர்*
*பண்ணியாழ்ப் புலவர் பாடற் பாணர்*
(சிலம்பு. 5:184-6)

எனக் கூத்தரும் இசைஞரும் பட்டியலிடப்படுகின்றனர். இவ்வருணனையில் இடம்பெறும் கண்ணுளாளர் என்ற சொல்லுக்கு அடியார்க்கு நல்லார் "மதங்கர்; ஆவார் பெரும்பாணர்; குழலரும் என்ப" எனப் பொருள் கூறுகிறார்.[9] கண்ணுளர், கண்ணுளாளர் எனப்பட்டோர் பொதுவியற் கூத்தர் அல்லர்; அரசமைப்புகளின் ஆதரவு பெற்ற உயர் வர்க்கப் பெரும்பாணர்கள் - அரங்கக் கூத்தர்களே என்பது இதனால் விளங்கும்.

கண்ணுள் என்ற சொல்லுக்குத் திவாகர நிகண்டு கூத்து என்று பொருள்கூறும். இச்சொல் பொருத்துதல், கட்டுதல், இசைவித்தல் எனப் பொருள்படுகிற கண்ணுதல் என்ற கருத்தின் அடிப்படையில் தோன்றியதாகும்.[10] தமிழ் இலக்கணப் பிரிவுகளுள் செய்யுள் இலக்கணம் யாப்பு எனப்படும். கட்டுதல் என்ற பொருளுடைய யாத்தல் என்ற சொல்லிலிருந்தே யாப்பு தோன்றிற்று. இன்றும் பேச்சு வழக்கிலுள்ள பாட்டுக்கட்டுதல், கூத்துக்கட்டுதல் என்ற வழக்குகளை ஒப்பிட்டால் கண்ணுளர் எனக் கூத்தர்கள் வழங்கப்பட்டதன் பொருள் புலனாகும்.

“பல்வகைக் கூத்தும் விலக்கினில் புணர்த்து” என்றே சிலம்பதிகாரம் அரங்கேற்று காதை வரி 12இல் ஒரு குறிப்புள்ளது. இதற்கு, “பலவகைப்பட்ட புறநடங்களையும் ... பாட்டுகளுக்கு உறுப்பாய் வருவனவற்றுடனே பொருந்தப் புணர்த்தி” என்று அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும் பொருள் கூறுகின்றன.[11]

பாட்டுக்கும் கூத்துக்கும் வண்ணம் என்பது அடிப்படையானது. வண்ணம் என்ற சொல்லுக்குக் கட்டுதல், திரட்டுதல், உருவாக்குதல் என்ற அடிப்படையிலமைந்த வனம், வன்னம் ஆகிய சொற்களே மூலமானவை எனத் தெரிகிறது. வனப்பு என்ற சொல்லுக்குப் “பல உறுப்புகளும் திரண்ட வழிப் பெறுவதோர் அழகு” என்றே இலக்கண உரையாசிரியர்கள் பொருள்கூறுவர். ஒழுங்குபட்ட ஓசை அல்லது இசைந்து இயங்குகின்ற ஓசை இசை என்றும், ஒலிகள் இயைந்து இயங்குகின்ற கருவி இயம் என்றும் வழங்கப்படுவது போல, ஏழிசை ஒலிகள் உரிய விதத்தில் திரண்டு அமைவதே வண்ணம் ஆகும். தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியலின் முதல் நூற்பா வரி 9இல் “மாட்டே வண்ணமொடு யாப்பியல் வகை” என்ற தொடர் இடம்பெற்றுள்ளது. இவ்வியலின் நூற்பா 204-205 முதலியன பாஅ வண்ணம், தாஅ வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இயைபு வண்ணம், அளபெடை வண்ணம் முதலிய இருபது வகைப்பட்ட வண்ணங்களைக் குறிப்பிடுகின்றன. வண்ணம் என்பது பாவின் கண் நிகழும் ஓசை விகற்பம் என்று தொல்காப்பியப் பொருளதிகார நூற்பா உரையாசிரியர்கள் பொருள் கூறுகின்றனர்.

வல்வில் ஓரியை வன்பரணர் பாடிய புறப் பாடலில் (152:13) “பாடுவல் விரலியோர் வண்ணம்” என்ற வரி இடம்பெற்றுள்ளது.

சீவகசிந்தாமணி (பா. 1696), கனகமாலை வீணை இசைத்ததைக் குறிப்பிடும்போது,

*வள்ளிதழ்க் கோதை தானே இட்டதோர் வண்ணம் தன்னைக்*
*கொள்ளத்தான் முரலறுற்றுக் கோலமை வீணை கொண்டாள்*

எனக் குறிப்பிடுகிறது. தானே இட்டதோர் வண்ணம் என்பதற்கு உரை

எழுதும் நச்சினார்க்கினியர் "தானே புணர்த்ததொரு புணர்ப்பு விசேடம்" என்று எழுதுகிறார்.[12]

கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட பெரியபுராணத்தில் (இலைமலிந்த சருக்கம், பா. 408) ஆனாய நாயனார் புல்லாங்குழல் இசைத்தமை பின்வருமாறு விவரிக்கப்படுகிறது:

*எண்ணிய நூற் பெருவண்ணம் இடைவண்ணம் வனப்பென்னும்*
*வண்ண இசை வகையெல்லாம் மாதுரிய நாதத்தில்*
*நண்ணிய பாணியும் இயலும் தூக்கும் நடை முதற் கதியில்*
*பண்ணனமய எழும் ஓசை எம்மருங்கும் பரப்பினார்*

இன்றைய நிலையில் வர்ணம் (வண்ணம்), ராகம் ஆகிய சொற்கள் கர்நாடக சங்கீதத்தில் சற்றே வேறுபடுத்திப் பொருள் கொள்ளப்பட்டாலும், சங்க காலத்தில் வண்ணம் என்பதே பண்ணுக்கு அடிப்படையாகக் கருதப்பட்டது. இக்கருத்தின் அடிப்படையில் வண்ணம் என்ற சொல்லுக்கு ராகம் என்றே 18ஆம் நூற்றாண்டில் பெஸ்கியால் (வீரமாமுனிவர்) தொகுக்கப்பட்ட சதுரகராதியும், அதனை அடிப்படையாகக்கொண்டு 19ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட ஜெ.பி. ராட்லரின் அகராதியும் பொருள்கூறுகின்றன.[13]

தொல்காப்பியம் செய்யுளியல் முதற் நூற்பாவில் 4ஆம் அடியில் பா குறிப்பிடப்படுகிறது. பாவகைகளுள் கலிப்பாவும் ஒன்று. கலிப்பாவில் வண்ணகம் எனப்படும் பாவகையினை வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா என்று குறிப்பிடுவது மரபு. இப்பாவகை தரவு, தாழிசை, வாரம் (தரவோடு ஒத்த சுரிதகம்), எண் என்ற உறுப்புகளை உடையதெனத் தொல்காப்பியம் செய்யுளியல் நூற்பா 135 கூறுகிறது. இவ்வாறு வண்ணம், வண்ணகம் என்ற சொற்கள் குறிப்பிட்ட பண் நீர்மையுடன் கட்டப்பட்ட இசையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில் (வரி 93-94) "வலிவும் மெலிவும் சமனுமெல்லாம் பொலியக் கோத்த புலமையோன்" என்ற வரி இடம்பெறுகிறது. "இப்படியால் வலிவும் மெலிவும் சமனும் என்று சொல்லப்படா நின்ற தான நிலையினையுடைய இசைக் கூறுபாடுகளுக்கெல்லாம் நரப்படைவு கெடாமலும் பண்ணீர்மை முதலாயின குன்றாமலும் புணர்க்க வல்லனாய் அப்புணர்ப்பிற்கு அமைந்த

எழுத்துகளால் இசை செய்யவல்ல யாழாசிரியன்” என மேற்குறித்த வரிகளுக்கு உரையாசிரியர்கள் பொருள் கூறுகின்றனர்.[14] வண்ணகம், புணர்த்தல் ஆகிய சொற்கள் இசையுடனும் கூத்துடனும் தொடர்புடைய தொழில்நுட்பச் சொற்கள் என்ற உண்மையினை இவற்றால் தெளிவாக உணரலாம்.

தமிழ் பிராமி கல்வெட்டுகளுள் இசைத் தொடர்புடைய கல்வெட்டு ஈரோடு மாவட்டம் அரச்சலூரில் உள்ளது. இக்கல்வெட்டு அரச்சலூரின் வடபுறமுள்ள நாகமலையில் கற்படுக்கைகள் கொண்ட ஆண்டிப்பாறை என்னும் பாறையில் கற்படுக்கைகளுக்கு இடையில் கி.பி. 4ஆம் நூற்றாண்டுக்குரிய எழுத்தமைதியுடன் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் வாசகம் “எழுத்தும் புணருத்தான் மலைய் வண்ணக்கன் தேவன் சாத்தன்” என ஐராவதம் மகாதேவன் அவர்களால் வாசிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு வாசகத்தை ஒட்டி “த தை தா தை, த” என்றும், “கை, த, தை, த, கை” என்றும் தொடங்கும் அட்டவணை வடிவங்கள் இரண்டு அக்கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன. கூத்துக்கும் பாட்டுக்குமுரிய இவ்வெழுத்துகளைக் கோத்து அல்லது புணர்த்து அட்டவணையாக அமைத்தவன் தேவன் சாத்தன் என்பவன் என்றும், அவன் கொங்கு வேளாளர் குலப் பிரிவான வண்ணக்க கோத்திரத்தவன் ஆவான் என்றும் ஐராவதம் மகாதேவன் பொருள் கூறுகிறார்.[15]

மலை வண்ணக்கன் என்ற தொடர் மலைநாட்டு வண்ணக்கன் அதாவது கொங்கு நாட்டுக்கு மேற்கே உள்ள சேர நாட்டைச் சேர்ந்த வண்ணக்க கோத்திரத்தவன் என்று பொருள்படுமென ஐ. மகாதேவன் கூறுகிறார்.

இக்கல்வெட்டு 1962ஆம் ஆண்டில் கண்டறியப்பட்டபோதே இசை, கூத்து ஆகியவற்றுடன் தொடர்புடைய கல்வெட்டு என்று கல்வெட்டு ஆய்வாளர்கள் புரிந்துகொண்டனர். தொடக்கத்தில், “ஏழுதானம் பண்வித்தான் மணிய வண்ணக்கன் தேவன் சாத்தன்” என்று இக்கல்வெட்டு வாசிக்கப்பட்டது. “ஏழு தானம் பண்வித்தான்” என்பதற்கு “ஏழு ஸ்வரஸ்தானங்களை உருவாக்கினான்” என்றும், “மணிய வண்ணக்கன்” என்பதற்கு “ஊர் மணியக்காரன்; வர்ணம் பாடுவதில் தேர்ந்தவன்” என்றும் காலஞ்சென்ற தொல்லியல் அறிஞர் தி.நா. இராமச்சந்திரன் அவர்கள் பொருள்கொண்டார்.

தி.நா. இராமச்சந்திரனின் மாணவரும், கலை வரலாற்று அறிஞருமான இரா. நாகசாமி “ஏழுதானம் பண்வித்தான்” என்ற வாசிப்பினை மாற்றி “எழுத்துப் புணருத்தான்” என்று வாசித்தார். இதனையே சிறு மாற்றத்துடன் ஐ. மகாதேவன் ஏற்றுக்கொள்கிறார். புணர்த்தல் என்ற தொழில்நுட்பச் சொல் சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றிருப்பதனை மேற்குறித்த அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். ஆயினும், ஐ. மகாதேவன் வண்ணக்கன் என்ற சொல்லினை, தி.நா. இராமச்சந்திரன் பொருள் கொண்டதுபோல் இசை குறித்த முதன்மையான தொழில்நுட்பச் சொல் வடிவங்களாகிய வண்ணம், வண்ணகம் ஆகியவற்றோடு தொடர்புபடுத்தாமல் நாணயப் பரிசோதகன்,[16] மேலாளன் என்பன போன்ற பொருள்கோடல்களை விவாதித்துவிட்டுக் கொங்கு மண்டல சதகத்தில் குறிப்பிடப்படும் வண்ணக்க கோத்திர வேளாளர் பிரிவினன் என்று மட்டும் பொருள்கூறி விட்டுவிடுகிறார். “த தை தா” எனத் தொடங்கும் அட்டவணையில் குறிப்பிடப்படும் பண் சிலப்பதிகார (17:13) உரையில் அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் சதுரப்பாலைப் பண்ணினைக் குறிக்கக்கூடும் என்று (இசையறிஞர் எஸ். இராமநாதன் அவர்களின் கருத்துகளின் அடிப்படையில்) நுட்பமாக விளக்கம் அளிக்கும் ஐ. மகாதேவன், வண்ணம், வண்ணகம் என்ற சொற்கள் இசை தொடர்பான தொழில்நுட்பச் சொற்கள் என்பதை ஏனோ குறிப்பிடவில்லை. வண்ணக்க கோத்திர வேளாளர் பிரிவினர் இன்றும் அரச்சலூரில் வாழ்கின்றனர் எனத் தெரிகிறது. எனவே, அக்குலப் பிரிவினரின் மூதாதை ஒருவரே இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறார் என்பதைச் சரியான ஊகமாகவே கொள்ளலாம். ஆயினும், இது இசை தொடர்பான ஒரு சொல்லாட்சி என்பதே முதன்மையாகப் புரிந்துகொள்ள வேண்டியதாகும்.

வண்ணம் என்ற சொல்லுக்கே “புணர்த்த புணர்ப்பு” என்று சீவகசிந்தாமணி உரையில் விளக்கம் அளிக்கப்படுவதைக் கண்டோம். மணிய வண்ணக்கன், மலய் வண்ணக்கன் என்றெல்லாம் வாசிக்கப்பட்ட வாசகத்தினை “மறெய் வண்ணக்கன்” என்று வாசிப்பது பொருத்தமாகும். “மறை வண்ணக்கன்” என்பதே “மறெய் வண்ணக்கன்” என்று பொறிக்கப்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. யாழ் நூல் என்பது நரம்பிசைக் கருவி தொடர்பான வேதம் என்றே தொல்காப்பியத்தில்[17] குறிப்பிடப்படுவதால் மறை வண்ணக்கன் என்பதை வண்ணக்க மறை வல்லான், அதாவது “இசை நூல் வல்லவன்”

என்று பொருள்கொள்வது பொருத்தமாக இருக்கும். 'மறை' அல்லது 'மறைய்' என்பது 'மறெய்' என்று எழுதப்படுவதற்கு வாய்ப்புகள் உண்டு. பிராமிக் கல்வெட்டுகளில் 'லை' என்பது '¦¦Ä' என்று எழுதப்படுவது வழக்கம். எனினும் ஒற்றைக் கொம்புடன் 'லெ' என்றே எழுதப்படும் இடங்களும் உண்டு. கேரள மாநிலம் எடக்கல் கல்வெட்டில் "வெங்கோ மலை" என்பது "வெங்கோ மலெ" என்று எழுதப்பட்டுள்ளது. இது கி.பி. 5ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டாகும்.[18] கி.பி. 7-8ஆம் நூற்றாண்டுகளில் பிரதியெடுக்கப்பட்ட ஸ்கந்தசிஷ்ய பல்லவனின் இராயக்கோட்டைச் செப்பேட்டில் வரி 26இல் 'லை' என்பது ஒற்றைக்கொம்புடன் 'லெ' என்று எழுதப்பட்டுள்ளது.[19] பரமேஸ்வர பல்லவனின் கூரம் செப்பேட்டில் வரிகள் 59, 61, 67, 72, 80 ஆகியவற்றில் 'கை' என்பது 'கெயி' என்றும் 'ளை' என்பது 'ளெ' என்றும் 'லை' என்பது 'லெ' என்றும் எழுதப்பட்டுள்ளன.[20] எனவே, அரச்சலூர்த் தமிழ் பிராமிக் கல்வெட்டில் 'மறை' அல்லது 'மறைய்' என்பது 'மறெய்' என்று பொறிக்கப்பட்டிருப்பதாகக் கொள்வது ஏற்புடையதே. "மறை வண்ணக்கன்" என்பது இசைக் கல்விக்குரிய எழுத்து வரிசையை உருவாக்குபவன் என்றும் பொருள்படக்கூடும். ஏனெனில், வண்ணக்கிரமம், வண்ணமாலை என்ற தொடர்கள் அகரவரிசை எழுத்துகளைக் குறிக்கும்.[21] இந்த அடிப்படையில் இசை கூத்து ஆகியவற்றுக்குரிய ஒலிக்குறிப்பு எழுத்துகளைப் புணர்த்தவர் மறைவண்ணக்கன் அல்லது வண்ணக மறை வல்லானாகிய தேவன் சாத்தன் என்றும் பொருள் கொள்ளலாம். வண்ணம் என்ற சொல் வடிவம் (எழுத்து வடிவம், முத்திரை வடிவம்) என்று பொருள் விரிவடைந்து, நாணயத்தின் வடிவம், தரம், உண்மைத் தன்மை ஆகியவற்றைப் பரிசோதிப்பவனும் வண்ணக்கன் எனப் பெயர் பெற்றிருக்கலாம். எவ்வாறாயினும், வண்ணக்கன் என்ற சொல்லின் சுயமான பொருள் ஒலிகளை இணைத்து இசையை உருவாக்குபவன் என்பதே எனலாம்.

இப்போது முதன்மையான ஒரு கேள்வி எழுகிறது. இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ள இடம் ஒரு சமணப் பள்ளிக்குரிய கற்படுக்கைகளுடன் கூடியதாகும். 'இப்பள்ளி'யில் இசை கற்பிக்கப்பட்டதா, அவ்வாறு கற்பிக்கப்பட்டதென்றால் அது சமணப் பள்ளியா, பௌத்தப் பள்ளியா என்பன போன்ற கேள்விகளுக்கு இன்றுவரை விடை கிடைக்கவில்லை. இவ்வூரின் பெயரான அரச்சலூர் என்பது அறச்சாலையூர் என்பதன் திரிபாகக் கருதப்படுகிறது.[22] அறம் அல்லது தர்மத்தை முன்னிலைப்படுத்திய பௌத்த

அறவோர் பள்ளி இங்கு இருந்ததா, அவ்வாறாயின் சேர நாட்டில் உயிர்ப்புடன் இருந்த பௌத்த மரபுகளுடன் இப்பள்ளிக்குத் தொடர்புண்டா; சேரர்களின் முதன்மைத் தலைநகரமான கருவூர் இப்பகுதியில் இருப்பதாலும், கி.பி. 3ஆம் நூற்றாண்டுவரை அவ்வூர் ஓர் அரசிருக்கைக்குரிய பெருநகராக இருந்ததாலும் அத்தகைய அரசமைப்பின் ஆதரவில் பெரும்பாணராகவும், அரங்கக்கூத்தராகவும் உருவான வேளத்துப் பிள்ளைகள் வம்சத்தவரால் இந்த இசைப்பள்ளி இப்பகுதியில் தோற்றுவிக்கப்பட்டதா என்பன போன்ற கேள்விகள் விரிவாக விவாதிக்கப்பட வேண்டியவை ஆகும். கொங்கு நாட்டின் பல பகுதிகளிலும், கர்நாடகத்திலும் பரவலாகச் செல்வாக்குடன் திகழ்ந்த சமண சமயத் தொடர்பிலேயே இப்பள்ளி இயங்கியதற்கான சாத்தியக்கூறும் உள்ளது.[23] கருவூர்க்கு அருகிலுள்ள புகளூர்க் கல்வெட்டில் சேர மன்னன் வம்சத்தவர் கி.பி. 2ஆம் நூற்றாண்டில் சமண முனிவர்களுக்குக் கற்படுக்கை அமைத்துக்கொடுத்த செய்தி கல்வெட்டில் பதிவாகியுள்ளது.[24] கி.பி. 3ஆம் நூற்றாண்டிலும் புகளூரில் சமண சமயத்திற்கு ஆதரவு நீடித்து வந்தது என்பதற்குக் கல்வெட்டு ஆதாரம் உள்ளது.[25] எனவே, அரச்சலூர்ப் பள்ளியின் தோற்றம், இயக்கம் ஆகியவற்றையும் அம்மரபின் தொடர்ச்சியாகவே கொள்ளலாம். ஆனால், அரச்சலூர்க் கல்வெட்டு சேர மன்னர் ஆணைப்படியோ, ஆதரவின் அடிப்படையிலோ பொறிக்கப்பட்டதன்று. கி.பி. 4ஆம் நூற்றாண்டில் சேரர் ஆட்சி அகற்றப்பட்டுக் களப்பிரர் ஆட்சி ஏற்பட்டுவிட்ட பின்னர் இப்பள்ளி உருவாகியிருக்க வேண்டும். இப்பள்ளியின் முழு அதிகாரம் படைத்த மேலாளராக மறை வண்ணக்கன் தேவன் சாத்தனே இருந்துள்ளார் எனலாம். கி.பி. 5ஆம் நூற்றாண்டு இலக்கியமான சிலப்பதிகாரத்தில் (26:106-115) கொங்கணக் கூத்தரும் கொடுங் கருநாடரும் சேரன் செங்குட்டுவன் முன்னிலையில் இளவேனிற் பருவக் காதல் நுகர்ச்சி குறித்துப் பாடி ஆடியதாகக் குறிப்பிடப்படுகிறது. கருநாடக இசை - கூத்து மரபு பற்றிய முதல் குறிப்பு இதுவே ஆகும். கருநடக் களப்பிரர் ஆட்சியின் விளைவாக - அல்லது அடையாளமாக - கி.பி. 4ஆம் நூற்றாண்டில் அரச்சலூரில் இசை - கூத்துப் பள்ளி உருவாயிற்று எனக் கொள்ளலாம்.

கருநாடக இசை - கூத்து மரபுக்கும் களப்பிரர் ஆட்சிக்கும் முதன்மையான தொடர்பு இருந்ததாக நாம் கருதுவதற்கான காரணம், கி.பி. 5ஆம் நூற்றாண்டில் தமிழகத்தை ஆண்ட, களப்பிர அரசரும், சைவ

நாயன்மார்களுள் ஒருவருமான கூற்றுவ நாயனார் பற்றிய வரலாற்றுச் செய்தியே ஆகும். கி.பி. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனாரின் திருத்தொண்டத் தொகையில் ஆத்தி மாலை புனைந்த வேற்கூற்றன் (ஆர்புனைவேற் கூற்றன்) என்று கூற்றுவ நாயனார் குறிப்பிடப்படுகிறார். ஆத்தி மாலை சோழ அரச குலத்துக்கு உரியதாகும். அப்படியானால் கூற்றுவர் சோழர் குலத்தைச் சேர்ந்தவராகத்தானே இருக்கவேண்டும்? ஆனால், நம்பியாண்டார் நம்பி (கி.பி. 10ஆம் நூற்றாண்டு) தமது திருத்தொண்டர் திருவந்தாதியில் “கோதை நெடுவேல் களப்பாளனாகிய கூற்றுவனே” என்று குறிப்பிடுவதால் கூற்றுவ நாயனார் களப்பிர அரசரே என்று தெரிகிறது. இந்த முரண்பாட்டுக்குக் காரணம் என்ன? சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் கூற்றுவ நாயனார் வரலாற்றைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

களந்தையர் கோனாகிய கூற்றுவ நாயனார் உலகை வென்று ஆட்சி நடத்துகையில் தாம் சூடுவதற்கு மணிமுடி இல்லை என்பதால் வருத்தமுற்றுச் சோழர் முடிசூடும் தலமாக இருந்த தில்லை ஆடவல்லார் ஆலயத்தின் அந்தணர் மூவாயிரவரிடம் தம்மைச் சோழ நாட்டின் அரசராக முடிசூட்டுமாறு கேட்கிறார். மூவாயிரவரோ சோழர்க்கு மட்டுமே தாம் முடிசூட்ட இயலும் என்று கூறிவிட்டுச் சேர நாட்டுக்குச் சென்றுவிடுகின்றனர். கூற்றுவர் முடிசூடாமலேயே நாட்டை ஆள்கிறார். பெரியபுராணம் குறிப்பிடும் இத்தொன்மக் கதையின்மூலம் கூற்றுவ நாயனார் சோழ அரச குலத்தவரின் வேளத்துப் பிள்ளை என்றும், அதனால்தான் அவர் சோழ நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றிய பின்னரும் அவரைச் சோழராக அங்கீகரிக்கத் தில்லை மூவாயிரவர் மறுத்தனர் என்றும் உணரலாம். கூற்றுவ நாயனாரோ அவரது முன்னோராகிய முதற் களப்பிர அரசரோ சோழ அரச குலத்தவன் ஒருவனுக்குக் கர்நாடகக் கூத்தியர் வசம் பிறந்தவராக இருக்க வேண்டும். இதற்கு முன்னுதாரணமான ஒரு நிகழ்வு மணிமேகலையில் (22:30-39) குறிப்பிடப்பட்டுள்ளது. பரசுராமனின் தென்னகப் படையெடுப்பின்போது காந்தன் என்ற சோழ குலச் சத்திரியன் சோழ நாட்டை ஆள்கிறான். பரசுராமன் சத்திரிய வர்ணத்தவரை வேரறுப்பதற்காகவே படையெடுத்து வருகிறான் என்பதைச் சம்பாபதி மூலமாக அறிந்த காந்தன், தனது காதற்கணிகை மகனான ககந்தனை அரியணையில் அமர்த்திவிட்டுத் தலைமறைவாகிவிடுகிறான். சோழ

நாட்டை ஆட்சி செய்பவன் ஒரு சத்திரியன் அல்லன் என அறிந்த பரசுராமன் திரும்பிச் சென்றுவிடுகிறான். அவன் திரும்பிச்சென்ற பிறகு காந்தன் மீண்டும் அரியணையில் அமர்கிறான். பரசுராமன் காலத்தில் நிகழ்ந்ததாக மணிமேகலை குறிப்பிடும் இந்நிகழ்வினை ஒத்ததே சத்திரியர் அல்லாத கூற்றுவ நாயனார் (அல்லது களப்பிர அரசருள் முதல்வர்) சோழ அரியணையில் அமர்ந்த நிகழ்வும் ஆகும்.

களப்பிரர் ஆட்சிக் காலத்தில் தமிழக இசைக்கூத்து மரபு பல்வேறு வகைக் கலப்புகளைப் பெற்றது. சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்த காதையில் (வரி. 38-39) "வரிநவில் கொள்கை மறைநூல் வழுக்கத்துப் புரிநூல் மார்பர் உறைபதி" என்ற ஒரு குறிப்பு உள்ளது. கண்ணகியுடன் மதுரையை நோக்கிச் செல்கின்ற கோவலன் ஓர் இரவில் இந்தப் புரிநூல் மார்பர் உறைபதியில்தான் தங்குகிறான். இங்கு அந்தரி கோலம் பாடும் பாணரும் இருந்தனர். (மேற்படி காதை, வரி. 104-105.) இங்குதான் மாதவியிடம் வாயிலோனான இருந்த கோசிகமாணி என்ற பிராம்மணன் கோவலனைச் சந்திக்கிறான். இப்புரிநூல் மார்பரை அம்பணவர் என்று அரும்பத உரையாசிரியர் குறிப்பிடுகிறார்.[26] இவர்களையும் இவர்கள் வர்க்கத்தாரையும் வண்ணக மறைவல்லோராகிய வேளாளர் குலப்பிரிவினராகக் கொள்வதே பொருத்தமானது.

கி.பி. 8ஆம் நூற்றாண்டளவில் தமிழகக் கல்வெட்டுகள் சிலவற்றில் சப்தமாதர் (தாய்மார் எழுவர்) கோயில்களில் பூசைப் பணிபுரிகின்ற பாரசைவர் அல்லது பாரசவர் என்ற பிரிவினர் குறிப்பிடப்படுகின்றனர். பாரசைவர் என்போர் வட இந்தியச் சிற்றரசர் மரபினர் ஆவர். இவர்கள் பனை மரத்தைச் சின்னமாகக்கொண்ட பலதேவன் வழிபாட்டு மரபினர் என்றும், பாரசிவ நாகர் என்று வழங்கப்பட்டனர் என்றும் தெரியவருகின்றன.[27] நாகசுரம் என்பது இவர்களது இசைக் கருவியாகும். இக்குலத்தைச் சேர்ந்த குபீர் நாகா என்ற பெண்மணி குப்த அரச வம்சத்துடன் மணவுறவு கொண்டவள் ஆவாள். கி.பி. 4-5ஆம் நூற்றாண்டுகளில் களப்பிரர் ஆட்சிக் காலத்தில் குப்தப் பேரரசுக்கும் தமிழகத்துக்கும் இடையே நிலவிய பரிவர்த்தனைகள், பரஸ்பரத் தாக்கங்கள் போன்றவற்றை ஆராய்ந்தால் பாரசைவர் தொடர்பான முழுமையான சித்திரம் உருவாக வாய்ப்புண்டு. விஷ்ணுகோபன் என்ற குப்த மன்னன் காஞ்சியின்மீது படையெடுத்து

வந்தான் என்பது வரலாற்றில் பதிவாகியுள்ளது. குப்தர்களின் தொடர்பால் பாசுபத சைவ வழிபாட்டு மரபுகள் தமிழகத்தில் புகுந்ததைப் போன்றே, பாரசவ நாகர்களின் இசை - கூத்து அடிப்படையிலான சப்தமாதர் வழிபாட்டு மரபுகளும் தமிழகத்தில் ஊடுருவியிருக்கலாம். இவர்களே, இன்றைய உவச்சர் (இசை வேளாளர்) பிரிவினரின் முன்னோர் ஆவர்.[28]

களப்பிரர் ஆட்சிக் காலத்தில் தமிழகத்தில் நிகழ்ந்த சமூக மாற்றங்களில் குறிப்பிடத்தகுந்தது வேளாளர் எழுச்சி என்பதையும், அது கர்நாடக இசை மரபு, கூத்து மரபு முதலான பன்னாட்டு இசைக்கூத்து மரபுகளை ஈர்த்துத் தன்மயமாக்கி வளர்ந்த ஒன்று என்பதனையும் நாம் இதன்மூலம் உய்த்துணரலாம். அரச்சலூர்க் கல்வெட்டில் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம், அக்கல்வெட்டு எழுத்துகள் பல்லவ மன்னன் சிவஸ்கந்த வர்மனின் ஹிரகடஹள்ளி செப்பேட்டு எழுத்துகளின் சாயலைப் (ஆணித்தலை வடிவத்தைப்) பெற்றிருப்பதாகும். ஹிரகடஹள்ளி, ஆந்திர - கர்நாடக மாநில எல்லைப் பகுதியில் பெல்லாரி மாவட்டத்தில் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தின் வட பகுதியான தொண்டை மண்டலத்தில் பல்லவர் ஆட்சி ஏற்பட்டுவிட்ட நிலையில், பல்லவர் ஆட்சியில் நிகழ்ந்த பண்பாட்டு மாற்றங்களின் தாக்கம் கொங்கு நாட்டில் ஏற்பட்டிருக்க வாய்ப்புண்டு என்பது உண்மையே ஆயினும், கர்நாடக மாநிலத்தில் நிகழ்ந்த அரசியல் சமூகவியல் மாற்றங்கள் வரலாற்றுப் போக்குகள் ஆகியவற்றின் தாக்கமே முதன்மையாகப் பரிசீலிக்கப்பட வேண்டியதாகும். குறிப்பாக, குப்தர்களின் ஆட்சி தொடக்கிவைத்த சமூகவியல், வரலாற்றுப் போக்குகளின் தாக்கத்தால் வட கர்நாடகப் பகுதிகளில் எழுச்சி பெறத் தொடங்கிய வணிகர் குழுக்களின் ஆதிக்கத்தின் கீழும், அக்குழுக்களின் நேரடிக் கட்டுப்பாட்டிலும் இயங்கிய தச்சர், கொல்லர் (கல்வெட்டு, செப்பேடு எழுத்துப் பொறிப்போர்) ஆகியோரின் தமிழகத் தொடர்புப் பின்னணியில் இக்கல்வெட்டு ஆராயப்படுவது பொருத்தமாகும்.

இக்கல்வெட்டின் சமகாலத்தைச் சேர்ந்த இதே கொங்குப் பகுதியில் அமைந்துள்ள அம்மன்கோயில்பட்டியில் பொறிக்கப்பட்டுள்ள சுனைக் கல்வெட்டு ("பரம்பன் கோகூர்கிழார் மகன் வியக்கன் கோபன் கணதேவன்")

குறித்துச் சென்ற அத்தியாயத்தில் கண்டோம். அக்கல்வெட்டின் எழுத்துகளில் ஆணித்தலை அமைப்பு காணப்படாவிட்டாலும் க, ர போன்ற எழுத்துகள் எழுதப்பட்டுள்ள விதம் ஹிரஹடஹள்ளி செப்பேட்டு எழுத்துகளின் சாயலில் உள்ளது.[29] இக்கல்வெட்டு குறித்து இப்போதைய நிலையில் ஊகங்களின் அடிப்படையிலன்றி தரவுகளின் அடிப்படையில் தர்க்கபூர்வமான முடிவுகளுக்கு வரமுடியவில்லை. ஆயினும், இக்கல்வெட்டில் இடம்பெறும் பரம்பன் கோகூர்கிழார் என்ற தொடரினை பரம்பன் கோவூர் என்ற ஊரின் கிழார் என்றோ, பரம்பர் குடியைச் சேர்ந்த கோவூர்கிழார் என்றும் இருவிதமாகப் பொருள்கொள்ள முடிகிறது. பரம்பன் என்ற சொல் பறம்பன் என்ற சொல்லின் வேறு வடிவமாகக் கொண்டால் பாணர், பறையர் ஆகிய சங்க காலப் பூர்வகுடிகளோடு ஒத்த ஒரு பழங்குடியைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இடைக்காலக் கல்வெட்டுகளிலும்[30] உரையாசிரியர்கள் குறிப்பிலும்[31] பறம்பர் என்ற சொல் தோல்வினைஞர் என்ற பொருளில் பயன்படுத்தப்படுத்தப்பட்டுள்ளது. இந்திய நாட்டளவில் வரலாற்றுத் தொடக்க காலத்தில் யாகச் சடங்கின்போது கொல்லப்படும் விலங்கின் தோலினை உரித்துப் பதப்படுத்துதல், முரசு உருவாக்குதல், முனிவர்கள் அமர்வதற்குரிய மான் தோல் ஆசனம் உருவாக்குதல், பூணூலில் கரு மானின் தோல் (கிருஷ்ணாசினம்) சேர்த்தல் ஆகிய பணிகளைச் செய்ததாலும், பழங்குடி மக்களிடையே விலங்குத் தோலே முதன்மையான உடையாகவும்,[32] கவசமாகவும், கேடயமாகவும் இருந்தமையாலும் வரலாற்றுத் தொடக்கக் கட்டங்களில் சர்மகாரர் (தோல் வினைஞர்) உயர் சாதியினராகவே கருதப்பட்டனர் எனச் சில வரலாற்று அறிஞர்கள் எழுதியுள்ளனர். இத்தகைய தோல் வினைஞராக மட்டுமின்றித் தோற்கருவிகளை இசைப்போராகவும் பறம்பர்கள் இருந்துள்ளனர். அபிதானமணிமாலை என்ற பிற்கால நிகண்டு நூல் (பா. 352) பறம்பர், குயிலுவர் ஆகியவற்றை ஒரே சாதியினரைக் குறிக்கும் சொற்களாகவே குறிப்பிட்டுள்ளது.[33]

தில்லை மூவாயிரவர் கி.பி. 7ஆம் நூற்றாண்டில்கூட, "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டு எரியோம்பும் சிறப்பர்"களாகவே இருந்தனர் என்பது சம்பந்தர் தேவாரத்தால் (1:1:2) தெரியவருகிறது. பறப்பை என்பது யாகத்தில் விலங்கைப் பலிகொடுக்கின்ற மேடையைக் குறிக்கும். பறப்பை என்ற சொல்லே பறம்பர்களுடன் தொடர்புடைய சொல்லாக இருக்கலாம்.

அவ்வாறு இருப்பின், தில்லை ஆடவல்லான் வழிபாட்டை யாக மரபினரான (பூர்வ மீமாம்சகரான) தில்லை மூவாயிரவர்கள் ஏற்றபோது பறம்பர்களும் தம்முடைய இசையறிவின் அடிப்படையில் இந்த வழிபாட்டு மரபில் இணைந்திருக்க வாய்ப்புண்டு. பறம்பர் குலத்தவரின் வரலாறு விரிவாகவும், ஆழமாகவும் ஆராயப்பட்டால்தான் இத்தகைய சிக்கல்களுக்குத் தெளிவு ஏற்படும்.

சங்க காலப் புலவராகிய கோவூர்கிழாரின் வம்சத்தைச் சேர்ந்த ஒருவனே அம்மன்கோயில்பட்டிக் கல்வெட்டில் குறிப்பிடப்படுவதாகப் பொருள்கொள்ளவும் வாய்ப்புண்டு. இக்கல்வெட்டு அமைந்துள்ள சேலம் ஓமலூர்ப் பகுதியையடுத்துள்ள தர்மபுரி மாவட்டத்தின் அரூர் தின்னஹள்ளி வட்டங்கள் பல்லவ மன்னர்கள் காலத்தில் கோவூர் நாடு என்றெ வழங்கப்பட்டன. எனவே, இப்பகுதியைச் சேர்ந்த கோவூர் நாட்டின் கிழாராகச் சங்கப்புலவர் கோவூர்கிழாரைக் கருதுவதற்கு வாய்ப்புண்டு.[34] அவ்வாறு கொண்டால், கோவூர்கிழாரைப் பறம்பர் குடியினராகக் கருத இயலும். கோவூர்கிழார் இசை வல்லுநர் என்பது அவரால் இயற்றப்பட்ட புறநானூற்றுப் பாடல்களிலிருந்து தெரிய வருகின்றதென உ.வே.சா. அவர்கள் எழுதியுள்ளமை மனங்கொள்ளத்தக்கது.[35]

மேற்குறித்த பறம்பன் கோகூர்கிழார் மகன் பற்றிய ஆய்வினை இத்தகைய ஊகங்களின் அடிப்படையிலேயே நாம் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. எவ்வாறு இருப்பினும், இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் பறம்பன் கோகூர்கிழார் மகன் எழுத்தறிவுமிக்க, அரசியல் ஆதரவுள்ள க்ல்லெழுத்துப் பொறிப்பாளர்களை வைத்து ஆவணப் பதிவு செய்கின்ற ஒரு நிலையில் இருந்த தலைமகன் எனத் தெரியவருவதால் அவன் பழங்குடி நிலையிலேயே இருந்த ஒருவன் என நாம் கருதுவதற்கு வாய்ப்பில்லை. சமகால ஆட்சியாளர்களான களப்பிரர் என்ற வேளத்துப் பிள்ளைகள் ஆட்சி அமைவதற்கு உதவிய கிழார்கள் வம்சத்தவனாகவோ அத்தகையோர் ஆட்சியைக் கைப்பற்றிய பின்னர் அவர்களுடன் ஒத்திசைந்து வைசியர் - வேளாளர் கூட்டணி வலிமை பொருந்திய ஒன்றாக உருவாவதற்கு உதவியவனாகவோ இவனை நாம் கருதலாம். கி.பி. 5ஆம் நூற்றாண்டில் மைசூர் தலைக்காட்டுப் பகுதியில் கங்கை நதியின் குலத்தவர், அதாவது

வேளாள வர்ணத்தவர் என்றே தம்மை வெளிப்படையாக அறிவித்துக்கொண்டு ஆட்சியைக் கைப்பற்றிய கங்கர் குலத்தவரின் எழுச்சி என்பது இத்தகைய வண்ணக்கர்கள், கர்நாடகக் கூத்தர்கள், கிழார்கள் போன்றவர்களின் சமூகச் செல்வாக்கையே அடித்தளமாகக்கொண்டு தோன்றி எழுச்சிபெற்ற ஒன்றாகும்.

களப்பிரர் ஆட்சி முடிவடைந்த பின்னர், பாண்டிய மன்னர்கள் மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றியபோது அவர்களிடத்துத் தலைமைச் செயலர் போன்ற அதிகாரம் படைத்த ஆணத்தியாக (ஆணையைச் செயல்படுத்துபவர்) இசையறிவு மிக்க, மருத்துவ குலத்தவர் இருந்துள்ளனர். கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஜடில பராந்தக நெடுஞ்சடையனின் ஸ்ரீவரமங்கலம் செப்பேட்டில்[36] (வரி. 75-81) ஆணத்தியாகக் குறிப்பிடப்படுபவன் வாத்ய கேய சங்கீதங்களால் மலிவெய்திய ... வைத்திய குலத்தவனான தீரதரன் மூர்த்தி எயினன் என்கிற வீர மங்கலப் பேரரையன் ஆவான். இத்தகையோர் பாண்டிய அரச குலத்தவர் போன்றே இசையறிவு மிக்கவர்களாக இருந்தனர். இவர்கள் மகாமாத்திர பிராம்மணர்களாகவும், சவர்ண பிராம்மணர்களாகவும் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றனர். எனவே, இத்தகையோரைச் சிலப்பதிகார மாதவியிடத்து வாயிலோனாக இருந்த கோசிகமாணியை ஒத்தவர்கள் என்றோ, தலைமக்களின் வேளத்துப் பிள்ளைகளாவோ கருத இயலவில்லை. இசையறிவு - நடனத்திறமை பெறுதல் என்பதையும், குயிலுவவினை என்பதையும் வேறுபடுத்திப் பார்த்தால்தான் வெளித்தோற்றத்துக்கு முரண்பாடாகத் தெரியும் இத்தகைய சமூக வரலாற்றுப் போக்குகளுக்கான உட்பொருள் தெரியவரும்.

(தொடரும்)

**அடிக்குறிப்புகள்:**

**1.** முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் வெளிவந்த சோமனதுடி என்ற கன்னடத் திரைப்படம் துடி என்ற பழங்குடி இசைக்கருவியுடன் தொடர்புடையதாகும். ஒரிஸா மாநிலப் பாணர் குறித்தும், கடபர் குறித்தும் சென்னை அருங்காட்சியக மானிடவியல் துறைக் காப்பாட்சியர் திரு. மகேஸ்வரன் ஆய்வு செய்துள்ளார்.

**2.** திணை என்ற சொல் உயர்ந்த பொருளிலேயே சங்க இலக்கியங்களில் ஆளப்பெற்றுள்ளது. அக்கால ஒழுக்கக் கோட்பாடுகளின்படின் நானிலத் திணைக்குடிகளும் அடிமைகளுக்குரிய ஒழுக்கக் கோட்பாட்டினைப் பின்பற்றியவர்களாக இருந்திருக்க வாய்ப்பே இல்லை. குடி, குடும்பம் என்ற அமைப்பைப் பின்பற்றியவர்களாகவே இருந்திருக்க வேண்டும். இக்குடிகளுள் பெருங்குடி, சிறுகுடி என்ற பிரிவுகள் இருந்தன. சிறுகுடி என்பது நெகிழ்ச்சியான குடும்ப அமைப்பை உடையதாகும்.

**3.** இப்பாடல் வரிகள், இந்நான்கு ஆண்பாற் பெயர்களைக் குறிப்பிட்டுவிட்டு, இந்நான்கல்லது குடியும் இலவே என அஃறிணையில் முடிகின்றன. இதனைப் பற்றி இடைக்கால உரையாசிரியர்கள் விவாதித்துள்ளனர். "துடியன்குடி, பாணன்குடி, பறையன்குடி, கடம்பன்குடி" - இந்நான்கல்லது குடியும் இல்லை" என்று பொருள்படும்படி வாசிக்கப்பட வேண்டும் எனக் கருதுகின்றனர்.

**4.** முருகு மெய்ப்பட்ட புலைத்தி (புறம். 258:5) என்ற குறிப்பு இந்த ஊகத்துக்கு வழிவகுக்கிறது. எண்வகை மணங்களுள் பைசாச மணம் என்பது இத்தகைய ஆவி வசப்பட்ட வெறியாட்டாளருடன் கொள்ளும் (மண)உறவாகலாம். கேரல மாநிலத்தில் மண்ணாப்பேடி, புலைப்பேடி (மகளிர் வண்ணார், புலையர் சாதியினரால் தீண்டப்பட்டால் அவர்களுடன் சென்று வாழ வேண்டிய நிர்ப்பந்தம்) பற்றிய குறிப்புகள் 17ஆம் நூற்றாண்டு வரை கிடைக்கின்றன. துடியர்களின் வரலாறு இத்தகைய நிகழ்வுகளின் பின்னணியில் ஆராயப்பட வேண்டும்.

**5.** தமிழினி, ஜூலை-ஆகஸ்டு 2010, பக். 27 (இக்கட்டுரைத் தொடரின் அத்தியாயம் 5)இல் "இவ்வாறு பாணர்கள் வேளத்துப் பிள்ளைகள் ஆவதென்பது சுதந்திரமான - வைஸ்ய - வர்ண அந்தஸ்தைக் கைவிட்டு - சூத்திர அந்தஸ்தை அடைவது" என்றிருக்க வேண்டிய வாசகத்தில் "கைவிட்டுச் சூத்திர அந்தஸ்தை" என்பது விடுபட்டுள்ளது.

**6.** குமரி மாவட்டம் திருவாட்டாற்றை ஆண்டவன் எழினியாதன். வில்லியாதன், கிடங்கில் எனப்பட்ட திண்டிவனத்திற்கு அருகிலுள்ள நன்மாவிலங்கை அரசன்; ஓய்மா நாட்டு நல்லியக்கோடனின் முன்னோன்

**7.** பக். 139, சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும், உ.வே.சா. நூலகப் பதிப்பு, 2008.

**8.** “தாம் கொண்ட கோலத்தானும் கூத்தானும் நலம்பெறும் சாந்திக் கூத்தர். என்னை? .... மூசிய சுன்னம் முகத்தெழுதி ஈசனுக்கும் காளிக்கும் சாந்திக் கூத்தாடத் தகும் என்பதால் அறிக. மதங்கரென்பாரும் உளர்” - பக். 157, மேற்சுட்டிய நூல்.

**9.** பக். 168, மேற்படி நூல்.

**10.** கண்டு, கட்டி (நூல்கண்டு, கற்கண்டு, கருப்பங்கட்டி) என்பன கண்ணுதல் என்ற கருத்தோட்டத்துடன் தொடர்புடைய சொற்களாகும். கண்ணுள் வினைஞர் என ஓவியர்களையும் சிற்பிகளையும் சிலப்பதிகாரம் (16:106) சுட்டுகிறது. இப்பெயரும் கட்டுதல் புனைதல் எனப் பொருள்படும் கண்ணுதல் அல்லது கண்ணுள்வினை என்ற செயல்பாட்டின் அடிப்படையில் உருவாகியிருக்க வாய்ப்புண்டு. (கண்ணால் காண்பதைப் புறத்தே சிற்ப - ஓவியக் கலை வடிவமாக உருவாக்குபவர் என்று பொதுவாகக் கொள்ளப்படும் பொருளைவிட இது பொருத்தமாக உள்ளது.)

**11.** பக். 58, 82, சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும். புணர்த்தல் என்பது கட்டுதல் என்றே பொருள்படும்.

**12.** பக். 859, சீவகசிந்தாமணி மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், உ.வே.சா. பதிப்பு, 1969.

**13.** ஜே.பி. ராட்லர், Dictionary Tamil English, Vol. 4, p. 149, 1841. மறுபதிப்பு: ஐ.ஐ.டி.எஸ்., சென்னை-113, 2000.

**14.** பக். 69, 113, சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும்.

**15.** p. 144, Early Tamil Epigraphy, I. Mahadevan, CreA, Chennai, 2003.

**16.** மணி[ய்] வண்ணக்கன் என்பது மணிகளின் தரத்தைப் பரிசோதிப்பவனைக் குறிக்கும் என்று பொருள்விளக்கம் கூறி, கொங்கு நாட்டுக் கொடுமணலில் உயர்வகை மணிகள் கிடைத்த வரலாற்றுடன் தொடர்புபடுத்தியும் சில ஆய்வாளர்கள் எழுதியுள்ளனர்.

**17.** "அளபிறந்தி சைத்தலும் ஒத்திசை நீடலும் உளவென மொழிப இசையொடு சிவணிய நரம்பின் மறைய என்மனார் புலவர்." - தொல். எழுத்து. 33. வைதிக மரபில் சாம வேதமே இசைக்கு அடிப்படை என்ற கருத்து உண்டு.

**18.** Plate 52 - Edakal - B2, Inscription No. 119, Early Tamil Epigraphy.

**19.** பக். 49, பல்லவர் செப்பேடுகள் முப்பது, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1999.

**20.** பக். 52-53, மேற்படி நூல்.

**21.** pp. 3483-4, Tamil Lexicon, Madras University, 1982.

**22.** பக். 76-79, கொங்கு நாடும் சமணமும், புலவர் செ. இராசு, கொங்கு ஆய்வு மையம், ஈரோடு, 2005.

**23.** சமண சமயம் இசை முதலிய கலைகளை ஊக்குவிக்கவில்லை என்ற கருத்து பரவலாக இருப்பினும் சமண சமய இலக்கியங்களான சிலப்பதிகாரம், பெருங்கதை, சீவகசிந்தாமணி ஆகியவற்றில் இசை - கூத்து ஆகியன குறித்த பல செய்திகள் உள்ளன. புலவர் செ. இராசு இக்கல்வெட்டினைச் சமண சமயத் தொடர்புடையதாகவே கருதுகிறார். "கொங்கு நாடும் சமணமும்", மேற்சுட்டிய நூல்.

**24.** p. 405-413, Early Tamil Epigraphy.

**25.** p. 414-421, Early Tamil Epigraphy.

**26.** பக். 331, சிலப்பதிகார மூலமும் அரும்பத உரையும் அடியார்க்கு நல்லார் உரையும்.

**27.** History of India, K.P. Jaiswal, மேற்கோள்: பக். 73, வைணவத்தின் தோற்றமும் வளர்ச்சியும், சுவீரா ஜெய்ஸ்வால், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1991. 'பரமசிவ நாகர்' என்று இது தமிழில் தவறாக ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது.

**28.** இசை வேளாளருள் திருவாரூர்க் கொண்டி மரபினர் மிக உயர்ந்தோராகக் கருதப்படுவர். ஆடல் வல்ல கொண்டி (போர்க்காலங்களில் கொள்ளையடித்துக் கொண்டுவரப்படும்) மகளிர் பற்றிப் பட்டினப்பாலையிலும் (246-249), மதுரைக்காஞ்சியிலும் (583-585) குறிப்புகள் உள்ளன.

**29.** ஆந்திரத்திலும், கர்நாடகத்திலும் தொடக்க காலப் பல்லவர்களால் பின்பற்றப்பட்ட தென்பிராமி எழுத்துகளின் தாக்கம் இது என ஐ. மகாதேவன் கருத்துத் தெரிவித்துள்ளார். p. 184-6, Early Tamil Epigraphy.

**30.** கொல்லனும் வண்ணானும் ஈழவனும் பறம்பனும் பறையனும் ஒரோ குடியிருப்பது, கி.பி. 1000ஆவது கல்வெட்டு, Epigraphia Indica, XXXIII, No. 33.

**31.** சிலம்பு. 5:32இல், "தோலின் துன்னர்" என்ற தொடர் இடம்பெற்றுள்ளது. இதற்கு அடியார்க்கு நல்லார் "பறம்பர் முதலாயினோர்" எனப் பொருள் கூறுகிறார்.**31.**

**32.** துணி, அறுவை ஆகிய சொற்கள் துண்டிக்கப்பட்ட, அறுக்கப்பட்ட விலங்குத் தோலே தொடக்ககால வேட்டை நிலைச் சமூக அமைப்பில் ஆடையாகப் பயன்படுத்தப்பட்டமையை உணர்த்தும்.

**33.** திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை இயற்றிய அபிதானமணிமாலை. (பதிப்பு: சு. பாலசாரநாதன், உ.வே.சா. நூலகம், சென்னை-90, 1988.) குயிலுதல் என்ற சொல்லும் தைத்தல், யாத்தல் என்ற பொருளுடையதே. குஷீலவ என்ற வடசொல் இதன் திரிபாகலாம்.

**34.** தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை அலுவலர் (ஓய்வு) திரு. ச. கிருஷ்ணமூர்த்தி இக்கருத்தினைத் தெரிவித்தார்.

**35.** புறநானூறு மூலமும் பழைய உரையும், பாடினோர் வரலாறு, உ.வே.சா. நூலகம், 1971.

**36.** பக். 61, பாண்டியர் செப்பேடுகள் பத்து.